# நாளுக்கு நாள் அதிக ஆரோக்கியமான தெளிவுள்ள சருமம்

ரெக்ஸோனாவிலிருக்கும் *'கேடில்'* உங்கள் சருமத்தை அதிக தெளிவுடையதாகவும், அழகுடையதாகவும் செய்யும். தினமும் இருமுறை இச்சோப்பினால் கழுவுங்கள்.




# *ரெக்ஸோனா*

## *'கேடில்'** கலந்த சோப் இது ஒன்றே

* சருமத்தை மிருதுவாக்கும் எண்ணெய்களின் பிரத்தியேகக் கலவையின் ரெஜிஸ்டர் செய்யப்பட்ட பெயர் இது.

RP. 86-60 TM

ரெக்ஸோனா ப்ரொப்ரைட்டரி லிமிடெடுக்காக இந்தியாவில் தயாரிக்கப்பட்டது

# கல்கி பொருளடக்கம்


மலர் 11 இதழ் 38 | 1952 ஏப்ரல் 20 | நந்தன ஆ சித்திரை 8




"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே ; சம்பவங்களும் கற்பனையே.




சென்னை நகரத்திற்கு டிஸ்ட்ரிபியூட்டர்கள் :
சுராஜ் ஏஜன்ஸீஸ், 37, ஜானி ஜான்கான் ரோட், திருவல்லிக்கேணி, மதராஸ்
கோயமுத்தூர், பாலக்காடு, நீலகிரிக்கு ஹோல் ஏஜண்டு :
B. பாலபட்டாபி (1933-ல் ஸ்தாபிக்கப்பட்டது). கோயமுத்தூர்

# ஜுபிடர்

தயாரிப்பு

# ராணி

டைரக்‌ஷன்:

**பிரசாத்**

ஸ்டூடியோ:

சென்டரல் & நெப்ட்யூன்






மலர் 11 | இதழ் 38

தமிழ்த் திருநாடு தன்னைப்—பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. —பாரதியார்

# புது மந்திரி சபை

பல ஆண்டுகளுக்குப் பின்னர் சென்னைக் கடற்கரையில் தமிழ்ப் புத்தாண்டு பிறந்த அன்று மாபெரும் காங்கிரஸ் பொதுக் கூட்டம் நடந்தது. ஒரு லட்சத்துக்கு மேல் இரண்டு லட்சம் வரை மதிப்பிடும் அளவுக்குச் சென்னை நகர மக்கள் திரண்டு வந்து கூடியிருந்தார்கள். அவர்களுடைய உற்சாகம் சென்னை மாகாணப் பொது மக்களின் உற்சாகத்தைப் பிரதிபலிப்பதா யிருந்தது. "ராஜாஜி வாழ்க!" என்ற கோஷம் கடல் அலைகளின் ஓசையை அடக்கி விட்டு வானை அளாவியது என்று கூறுவது மிகைபடக் கூறுவதாகாது.

மக்களின் வாழ்க்கை ஒரு மாதத்துக்கு முன்பு இருந்தது போலவே இன்றும் இருக்கிறது. வெய்யில் இன்னும் கொஞ்சம் கடுமையாகி யிருக்கிறது. ஆனால் எல்லாருடைய இதயங்களிலும் ஒரு புதிய உற்சாகமும் நம்பிக்கையும் உதயமாகி யிருக்கின்றன. வெளியே வெப்பம் அதிகமா யிருந்தாலும் மக்களின் உள்ளங்கள் குளிர்ந்திருக்கின்றன. காரணம் என்ன?

ஐந்தாறு வருஷங்களுக்கு முன்பு நிகழ்ந்து விட்ட ஒரு தவறு திருத்தப் பட்டது என்ற எண்ணம் காரணமா யிருக்கலாம். "இனி எல்லாம் சரியாகி விடும்" என்ற ஆசை ஒரு வேளை காரணமா யிருக்கலாம். "உள்ள நிலைமைக்குப் பங்கம் விளையாது" என்ற நம்பிக்கையும் காரணமா யிருக்கலாம்.

நாலு பக்கத்திலும் திருட்டுப் பயம் ஏற்பட்டிருக்கும் போது வீட்டுக்குச் சரியான பூட்டுப் போட்டுப் பூட்டி விட்டால் ஒரு திருப்தி ஏற்படுகிற தல்லவா? அத்தகைய பத்திர உணர்ச்சியும் காரணமா யிருக்கக்கூடும்.

பொது மக்களின் ஆசையும் நம்பிக்கையும் நிறைவேறுவதற்குரிய உடல் வலியை ராஜாஜிக்கு அருள வேண்டுமென்று இறைவனைப் பிரார்த்திப்போமாக.

* * * *

நாம் நிச்சயமாக எதிர்பார்க்கக் கூடியது ஒன்று உண்டு. அரசாங்க நிர்வாகம் கட்டாயம் அபிவிருத்தி அடையும். அரசாங்க உத்தியோகஸ்தர்களின் காரியங்களில் மற்றவர்கள் அநாவசியமாகத் தலையிட மாட்டார்கள். அதே சமயத்தில் அரசாங்க உத்தியோகஸ்தர்கள் தாங்கள் பொதுஜன ஊழியர்கள் என்பதை உணர்ந்து புகார்களுக்கு இடங் கொடாமல் நடந்து கொள்வார்கள். ராஜாஜி உத்தியோகஸ்தர்களையும் உத்தியோக வர்க்கத்தையும் பாராட்டித்தான் பேசுவார். அவர்கள் மீது அநாவசியமாகக் குறை கூற மாட்டார்; அலட்சியமாகவோ அவமதிப்பாகவோ பேச மாட்டார். உத்தியோக வர்க்கத்தின் கட்சியை அளவுக்கு மீறி ராஜாஜி தாங்கிப் பேசுவதாகவும் தோன்றும். ஆனால் காரியாம்சத்தில் அவ்வளவுக் கவ்வளவு கண்டிப்பாக இருப்பார். திறமைக் குறைவையும், ஊழல்களையும் தயவு தாட்சண்யமின்றிக் களைந் தெறிவார்: கடமையைச் சரியாகச் செய்வோருக்குப் பாராட்டு; திறமைக்குப் புகழுரை; சோம்பலுக்குக் கல்தா; லஞ்சத்துக்குக் கடுந் தண்டனை.

ராஜாஜியின் இத்தகைய சுபாவத்தை முன்னமே நாம் அறிந்திருக்கிறோம். இனியும் பார்ப்போம் என்பதில் சந்தேகமில்லை. ஆகையால் அரசாங்க நிர்வாகம் எல்லாத் துறையிலும் அபிவிருத்தி அடையும் என்று உறுதியாக நம்பலாம்.

* * * *

ராஜாஜியின் மந்திரி சபையில் அவரைத் தவிர பதினான்குபேர் இருக்கிறார்கள். தேசத் தொண்டில் பிரபலமானவர்களும் இருக்கிறார்கள்; புதிய மனிதர்களும் இருக்

கிறார்கள். எதிர் பார்க்கப்பட்டவர்களும் இருக்கிறார்கள்; சிறிதும் எதிர் பார்க்கப்படாதவர்களும் இருக்கிறார்கள்.

அவர்களுடைய குணாதிசயங்களைப் பற்றி நமக்குக் கவலையில்லை; அவர்களுடைய திறமைகளை அளந்து பார்த்துத் தாரதம்மியம் கூறவேண்டிய அவசியமும் இல்லை; இன்னாருக்கு இன்ன இலாகாவைக் கொடுத்தது பொருத்தமா என்பது பற்றியும் நாம் யோசிக்க வேண்டியதில்லை.

மந்திரி யாரா யிருந்தாலும் முடிவான பொறுப்பு ராஜாஜியி னுடையது. புகழ் கிடைத்தால் அந்தந்த மந்திரிக்குப் போகும்; குற்றம் நேர்ந்தால் ராஜாஜியின் பேரில்தான் பொறுப்புச் சாரும்.

மற்றப் பதினைந்து மந்திரிகளுக்கும் நிர்வாக அநுபவத்தைப் பெறுவதற்கு இது ஒரு அரிய சந்தர்ப்பம். ராஜாஜி தமக்குப் பின்னால் பொறுப்பு வகிப்பதற்குச் சரியானபடி ஆட்களைத் தயார் செய்யவில்லை என்று அவர் பேரில் சிலர் குறை கூறுவதுண்டு. அப்படிக் குறை கூறுவதற்கு இடம் இருக்கக் கூடாதென்றுதான் பதினான்கு மந்திரிகளை நியமித்திருக்கிறார் என்று ஊகிக்கலாம். இவர்களில் ஒரே ஒருவர்தான் (ஸ்ரீ ஏ. பி. ஷெட்டி மட்டுந்தான்) ஏற்கெனவே மந்திரியா யிருந்தவர். மற்றவர்கள் அனைவரும் புதியவர்கள். அவர்களில் சுமாராக வயது வந்தவர்களும் இருக்கிறார்கள்; இளம் பிராயத்தினரும் இருக்கிறார்கள். அரசாங்க நிர்வாகத்தில் பயிற்சி பெறுவதற்கு இதைக் காட்டிலும் அநுகூலமான நிலைமை அவர்களுக்குக் கிடைக்கப் போவதில்லை. இந்த நிலைமையை நன்கு பயன்படுத்திக் கொண்டு பெயர் வாங்குகிறவர்கள் நீடித்த பொதுஜனத் தொண்டுக்குத் தகுதியும் வாய்ப்பும் அடைவார்கள். மற்றவர்கள் நமது அநுதாபத்தைப் பெறுவார்கள்!

• • •

பழைய மந்திரிமார்களில் தேர்தலில் வெற்றியடைந்தும் விடப்பட்டவர்கள் மூவர். ஸ்ரீ பெருமாள் சாமி ரெட்டியார், ஸ்ரீ ரோச் விக்டோரியா, ஸ்ரீ பரமேஸ்வரன் ஆகியவர்கள் ராஜாஜியின் நன்மதிப்பைப் பெற்றவர்கள். முதல் இருவரும் ராஜாஜிக்குத் துணை நின்ற சிநேகிதர்கள். அக்காரணத்தினாலேயே அவர்களை ராஜாஜி விட்டு விட்டார் என்று சொல்வதும் தவறாகாது! இதுவும் ராஜாஜியின் 'கோணல்' சுபாவத்தைச் சேர்ந்தது என்பது நாம் அறிந்ததுதானே!

* * *

ராஜாஜியின் தலைமையும் சரி, இந்த மந்திரி சபையும் சரி, வெகுகாலம் நீடித்திருக்க முடியாது என்பது வெளிப்படை. இப்போதுள்ள சட்டசபையில் காங்கிரஸ் கட்சி சிறுபான்மையானது. எத்தகைய மாய வித்தையினாலும் சிறுபான்மையைப் பெரும்பான்மை ஆக்கிவிட முடியாது. உத்தியோகம் கொடுப்பதாகச் சொல்லியோ, வேறு வித ஆசைகள் காட்டியோ மற்றக் கட்சியாரைக் காங்கிரஸில் சேர்ப்பதற்கு முயலக் கூடியவர் ராஜாஜி அல்ல. அத்தகைய உத்தேசம் அணுவளவும் இருந்தால், எட்டு அல்லது ஒன்பது மந்திரிகளை நியமித்துக்கொண்டு மற்ற மந்திரி பதவிகளுக்கு நியமனத்தைப் பின்னுக்குத் தள்ளி வைத்துக் கொண்டிருப்பார் அல்லவா!

"நாங்கள் நேர்மையாகவும் பாரபட்ச மின்றியும் பொதுநலத்தைக் கருதி நிர்வாகம் நடத்துகிறோம். ஆதரிப்பதும் நிராகரிப்பதும் உங்கள் மனச்சாட்சியைப் பொறுத்தது" என்றுதான் ராஜாஜி மற்றக் கட்சியாரையும் சுயேச்சையாளரையும் பார்த்துச் சொல்லுவார். அவர்களில் எவ்வளவு பேர் மந்திரி பதவியைக் காட்டிலும் மனச் சாட்சியைப் பெரிதாக மதித்து, இந்த மந்திரி சபையை நீடித்து ஆதரித்து வருவார்கள் என்பதை நாம் சொல்ல முடியாது.

ஆகையால் இன்னும் சில மாதங்களிலோ ஒரு வருஷத்திற்குள்ளாகவோ இந்தச் சட்ட சபையைக் கலைத்து மறு தேர்தல் நடத்தும்படி நேரலாம்.

சட்ட சபைக்குள்ளேயும் வெளியிலும் உள்ள காங்கிரஸ் வாதிகள் அனைவரும் வரப் போகும் பொதுத் தேர்தலை இலட்சியமாக வைத்துக் கொண்டு இன்று முதல் காரியம் செய்யவேண்டும்.

மந்திரிமார்களிலும் சரி, காங்கிரஸ் எம். எல். ஏ. க்களிலும் சரி, வெளியிலுள்ள காங்கிரஸ்காரர்களிலும் சரி, வருகிற ஏழெட்டு மாதங்களில் யார் யார் பொதுஜனத் தொண்டு நன்கு செய்து பொதுஜனத் தொடர்பை வளர்த்துக் கொள்கிறார்களோ, அவர்கள்தான் அடுத்த தேர்தலில் முன்னணியில் நின்று வெற்றி பெறுவார்கள்.

இப்போது அதிருப்தியோ அசிரத்தையோ கொண்டு வேலை செய்யாதிருப்பவர்கள் பின்னுக்குப் போகும்படி நேரும் என்பதில் ஐயமில்லை.

கட்சிக்குள்ளேயே இருந்து கொண்டு புகார்கூறி முணு முணுப்பவர்களும் விஷமம் செய்பவர்களும் பிற்பாடு அரசியல் வாழ்வுக்கே தகுதியற்றவர்கள் ஆகி விடுவார்கள்.

எவ்வளவோ கஷ்டமான நிலைமையில், தேச நலமாகிய நிர்ப்பந்தத்துக்கு உட்பட்டு, மெலிந்து போன உடல் நிலையைப் பொருட்படுத்தாமல் ராஜாஜி இந்த மகத்தான இராஜ்ய பாரத்தை ஏற்றுக் கொண்டிருக்கிறார் என்பது வெளிப்படை.

இந்த நெருக்கடியில் அவருடன் உற்சாகமாகவும் பரிபூரணமாகவும் ஒத்துழைப்பவர்கள் வருங்கால அரசியல் வாழ்வில் சிறப்படைவார்கள்.

# மல்லேசுவரி

சமீப காலத்தில் வெளியான இந்தியப் படங்களைப் பற்றி எண்ணும்போது ரஸிகர்களுக்கு ஏற்படக் கூடிய மனச் சோர்வுக்கு ஒரு மாமருந்து போல் "மல்லேசுவரி" என்னும் தெலுங்கு பேசும் படம் வெளியாகி யிருக்கிறது.

களிப்பூட்டும் படம், கருத்துள்ள படம் தரம் உயர்ந்த படம் என்று நாம் குறிப்பிட்டிருந்த மூன்று வகைப் படங்களுக்கும் சிறந்த உதாரணமாக எடுத்துக் காட்டும்படியான முறையில் இந்தப் படம் அமைந்திருக்கிறது.

தென்னாட்டிலே தயாரித்த படம் என்று இதைப் பெருமையுடன் நாம் அகில இந்தியாவிலும் காட்டலாம். சிற்சில திருத்தங்களுடன் அகில உலகத்திலேயும் கூடக் காட்டலாம்.

"அப்படி உயர்வாகச் சொல்லுவதற்கு இந்தப் படத்தில் என்னென்ன அம்சங்கள் இருக்கின்றன!" என்று பார்ப்பதற்கு முன்னால், என்னென்ன அம்சங்கள் இல்லை என்பதை முதலில் சொல்ல விரும்புகிறோம்.

1. மட்டமான டப்பா சங்கீதம் இல்லை.

2. பின்னணியில் இங்கிலீஷ், ஸ்பானிஷ், ஹவாய் சங்கீத முறைகள் கலந்த கபந்த கோரங்கள் இல்லை.

3. மேற்கத்திய வடநாட்டு நடனங்களும் அருவருப்பான மெக்ஸிகன் நடனங்களும் கலந்த அவலட்சண நடனக் கூத்துக்கள் இல்லை.

4. ஆபாசமான காட்சியோ, விரஸமான வார்த்தையோ ஒன்று கூட இல்லை.

5. விஷத்தைக் கக்கும் துவேஷப் பிரசாரம் கிடையவே கிடையாது.

6. எந்த வகுப்பாரையோ, எந்த மதத்தினரையோ, அல்லது பண்பட்ட ரஸிகர்களின் உள்ளத்தையோ புண்படுத்தக் கூடிய கேவலமான கட்டம் ஒன்றும் இல்லை.

7. மொத்தத்தில் நன்றா யில்லாத அம்சம் எதுவுமே இல்லை.

இனி, இந்தப் படத்தில் பாராட்டுவதற்குரிய நல்ல அம்சங்கள் என்னென்ன இருக்கின்றன என்பதைப் பார்க்கலாம்.

1. இந்திய மக்களின் பூர்வீகப் பண்பாட்டின் மகோன்னதத்தை இப் படம் பிரதிபலிக்கிறது.

2. நமது புராதன சிற்பக் கலையின் சிறப்பு இதில் பொலிகிறது.

3. நமது கர்னாடக சங்கீதக் கலை இதில் பெருமைப் படுத்தப் படுகிறது. நாட்டுப் பாடல் மெட்டுக்களும் இடம் பெற்றிருக்கின்றன.

4. நம் நடனக் கலையின் உயர்வு திகழ்கிறது.

5. இந்திய மக்களின் இனிய பண்புகளும் துர்க்குணங்களும் இயல்பாகக் கலந்து, இனிய பண்புகளே மேலோங்கி நிற்கின்றன.

6. தூய்மையான காதலும், அக் காதலின் பொருட்டுச் செய்யப்படும் முயற்சியும் தியாகமும் உயர்த்தப் படுகின்றன.

7. மொத்தத்தில் ஒரு நாட்டின் உயர்வுக்கும் நாட்டு மக்களின் மேன்மைக்கும் உரிய நல்ல அம்சங்கள் எல்லாம் இப் படத்தில் இருக்கின்றன.

## சரித்திர அடிப்படை

விஜய நகர சாம்ராஜ்யம் மகோன்னதத்தை அடைந்திருந்த காலத்தில், ஸ்ரீ கிருஷ்ணதேவராயர் எட்டுத் திக்கிலும் புகழ் பரப்பி ஆட்சி செலுத்தி வந்த காலத்தில் கதை நிகழ்கிறது.

ஒரு கிராமத்தில் சிற்பத்தில் ஆர்வம் கொண்ட ஒரு சிறுவனும் ஆடல் பாடல்களில் ஆர்வமுடைய ஒரு சிறுமியும் சேர்ந்து வளருகிறார்கள். அவர்களுடைய நேயமும் வளர்ந்து வருகிறது. அவர்களுடைய மனோரதம் நிறைவேறுவதற்கு இடையூறுகள் குறுக்கிடுகின்றன. மல்லம்மாவின் தாயார் தன் அருமை மகள் ஏழை நாகராஜுவை மணம் புரிந்து கொள்வதை விரும்பவில்லை. நாகராஜு தன் சிற்பக்கலையின் திறமையைப் பயன்படுத்திப் பொருள் சேர்த்துக் கொண்டு வரப் போகிறான். அவன் திரும்பி வருவதற்குள் மல்லம்மாவுக்கு விஜயநகரம் அரண்மனையிலிருந்து பல்லக்கு வந்து அவளை அழைத்துக் கொண்டுபோய் விடுகிறது. மகாராணியின் உற்ற தோழியாக மல்லம்மா அரண்மனையில் சுகபோக வாழ்வு நடத்துகிறாள். ஆனால் அவளுடைய உள்ளம் நாகராஜுவை நினைத்து ஏங்குகிறது. நாகராஜு திரும்பி ஊருக்கு வந்து மல்லியைக் காணாமல் வெறி கொள்ளுகிறான். அந்த வெறி அவனைச் சிற்பக்கலை மேதையாக்குகிறது. சக்கரவர்த்தியின் நடன மண்டபத்தை அமைத்த தலைமைச் சிற்பி, நாகராஜு



" என் கைத்தடி யாரையும் அடிப்பதற்காக அல்ல...



" என் முதுமையின் அடையாளச் சின்னமே " என் கட்சிக் கூட்டத்தில் கூறினார் ராஜாஜி. ஆனால்......




கைத்தடியோடு கூடத் தோள் வலிமையும் அவருக்கு இப்போது கிடைத்திருக்கிறது.

லைக் கண்டுபிடித்து அவனுடைய மேதையைப் பயன்படுத்திக் கொள்கிறான். இதன்மூலம் காதலர்கள் சந்திக்க வழி ஏற்படுகிறது. மல்லி அரண்மனை வாழ்விலிருந்து ஓடிப்போகத் தீர்மானிக்கிறாள். அதற்கு ஒரு தடை குறுக்கிடுகிறது. காதலர்கள் பேராபத்தில் சிக்கிக் கொள்கிறார்கள். பிறகு ஸ்ரீ கிருஷ்ண தேவராயரின் பெருந்தன்மையினால் அவர்கள் அபாயத்திலிருந்து விடுதலையடைந்து மகிழ்கிறார்கள்.

இந்தச் சரித்திர காலக் கதையில் எவ்வித முரண்பாடும் தோன்ற இடமில்லாமல், அந்தக் காலத்து நடை உடை பாவனைகள் உண்மையாகப் பிரதிபலிக்கும்படி "மல்லீஸ்வரி" படம் எடுக்கப்பட்டிருக்கிறது.

கதாபாத்திரங்களின் உணர்ச்சி வேகத்தையும் நிகழ்ச்சிகளின் பரபரப்பையும் தூக்கிக் காட்டக் கூடிய முறையில் நம் கர்நாடக சங்கீதத்தைக் கொண்டே பின்னணி சங்கீதத்தை அமைக்கலாம் என்பதை இப்படத்தில் நிரூபித்திருக்கிறார்கள்.

பரத நாட்டியத்தை அடிப்படையாகக் கொண்டு சினிமாவுக் கேற்ற பிரமிக்கத்தக்க கோஷ்டி நடனங்களை அமைக்கலாம் என்பதையும் இப் படம் நிரூபிக்கிறது.

பரத நாட்டியக் கலையை யொட்டி ஆந்திர தேசத்தில் வளர்ந்துவந்த குச்சிபூடி நடனத்தின் சிறந்த அம்சத்தை இப்படத்தில் காணலாம்.

## சில அபூர்வ கட்டங்கள்!

நாகராஜு சிற்பக் கலையில் மேதாவியாகிறான் என்பதைக் காட்டும்போது, சிலைகள் ஒன்றன் பின் ஒன்றாக வரும் காட்சி ரோமாஞ்சனத்தை உண்டாக்குகிறது.

மல்லியை அழைத்துப் போக அரண்மனை ராணி வாசப் பல்லக்கு வருவது அந்த ஊர்க்காரர்கள் அனைவருக்கும் மகிழ்ச்சி அளிக்கும் கட்டம். மல்லிக்கு உபசாரங்கள் செய்து ஆலாத்தி எடுத்து வாழ்த்துப் பாடி அனுப்புகிறார்கள். ஆனாலும் மல்லியின் உள்ளம் அப்போது சோகத்தினால் உருகுவதைப் படம் பார்ப்பவர்கள் தெரிந்து கொண்டு கண்ணீர் பெருக்கும்படியான அற்புத வித்தையை டைரக்டர் கையாண்டிருக்கிறார்.

அரண்மனையில் மதிள் ஏறிக் குதித்துப் புகுந்து விட்ட நாகராஜுவை அரண்மனைக் காவலர்கள் தேடிக் கண்டு பிடிக்கும் கட்டம் சொல்ல முடியாத பரபரப்பை உண்டாக்குகிறது.

இங்கே, படத்தின் டைரக்டர் ஒரு பெரிய குற்றம் செய்திருக்கிறார்! நியாயமாக ஒரு கத்திச் சண்டையை இந்தக் கட்டத்தில் புகுத்தியிருக்கலாம். பத்துப் பதினைந்து நிமிஷ நேரம் கண கண ஜண ஜணவென்று தகரக் கத்திகள் தாக்கிக் கொள்ளும் சத்தத்தை எழுப்பி யிருக்கலாம். உருளல், புரளல், தாண்டல், தாவல், தத்திக் குதித்தல், வெட்டுக் காயம், இரத்தப் பெருக்கு,— இவ்வளவையும் புகுத்திப் படத்தை அமோக வெற்றி கரமாகச் செய்திருக்கலாம்!!!

ஆனால் டைரக்டர் பி. என். ரெட்டி இத்தகைய அருமையான சந்தர்ப்பத்தை அநியாயமாகக் கை நழுவ விட்டு விட்டார்! பிழைக்கத் தெரியாதவர்!

## இலட்சிய சிகரம்

வாஹினி ஸ்தாபனத்தைச் சேர்ந்த டைரக்டர் பி. என். ரெட்டி ஆரம்ப நாட்களிலிருந்து உயர்ந்த இலட்சியக் கருத்துக்கள் அமைந்த படங்களை எடுப்பதையே குறிக்கோளாக வைத்துக் கொண்டிருக்கிறார். "சுமங்கலி" "வந்தேமாதரம்" முதலிய படங்கள் நேயர்களுக்கு நினைவிருக்கலாம். அவற்றில் சில படங்கள் நல்ல வெற்றிகரமாகவும், சில படங்கள் சாதாரணமாகவும் அமைந்தன.

டைரக்டர் பி. என். ரெட்டியின் இலட்சிய முயற்சிகளின் சிகரம் "மல்லீஸ்வரி" என்று சொன்னால் மிகையாகாது.

"மல்லீஸ்வரி" பாமர ஜனங்களின் மனதைக் கவருமா, சினிமா ரஸிகர்களின் உள்ளங்களைக் கொள்ளை கொள்ளுமா, 'மாஸ் அப்பீல்' இருக்குமா, 'பாக்ஸ் ஆபீஸ் ஹிட்' ஆகுமா,—என்றெல்லாம் நாம் சொல்லுவதற்கில்லை.

ஆனால் இம்மாதிரி உயர்தரப் படங்கள் வெற்றியடைந்தால்தான் நமது நாட்டில் பேசும் படக் கலையும் தொழிலும் மேன்மையுற்று உலக அரங்கத்தில் நாம் புகழ்பெற இடம் ஏற்படும்.

* * *

"மல்லீஸ்வரி" தெலுங்கு பேசும் படம். ஆனால் கதைப் போக்கின் தன்மையினால் தெலுங்கு தெரியாதவர்களும் பார்த்து அறிந்து மகிழக் கூடியது. கொஞ்சம் தெலுங்கு தெரிந்தவர்கள் நன்கு தடையின்றிப் பார்த்து மகிழலாம்.

தமிழ் நாட்டில் திரையிடுவதற்கென்று இடையிடையே கதைப் போக்கைத் தமிழில் எழுதியும் எடுத்துச் சொல்லியும், இப்படம் இப்போது புனரமைப்புப் பெற்றிருக்கிறது. ஆதலின், பாஷைத் தடை முக்காலே அரைக்கால் பங்கும் நீங்கிவிட்டது.

தமிழ் மக்கள் பார்க்க வேண்டிய படம், நம் கலைகளிலும் பூர்வீகப் பண்பாட்டிலும் ஆர்வம் உடையவர்கள் அவசியம் பார்க்கவேண்டிய படம், சினிமாத் தொழில் முன்னேற்றத்தில் சிரத்தை கொண்டவர்கள் அனைவரும் பார்த்தே தீர வேண்டிய படம்,—மல்லீஸ்வரி.

# கடவுளும் கம்பரும்

சிலகாலமாகத் தமிழகத்தில் சில விநோதமான கிளர்ச்சிகள் நடந்து வந்தன. "கடவுளை ஒழிப்போம்" "ஹிந்து சமயத்தைத் தொலைப்போம்" "கம்பரை ஒழிப்போம்" என்றெல்லாம் சிலர் கச்சை கட்டிக்கொண்டு கிளம்பினார்கள்.

கடவுளைப் பற்றி நாம் கவலைப் படவேயில்லை. ஜாபாலி முதலிய முனி புங்கவர்களும், இரணியன் முதலான இராட்சதர்களும்

போல் கெட்டியாக வேர் விட்டுக்கொண்டு கடவுள் மக்களின் இதயங்களில் அமர்ந்திருக்கிறார்.

ஹிந்து சமயத்தை ஒழித்து விடுவதும் அவ்வளவு இலகுவான காரியமில்லை. கிரேக்கர்கள், ஹூணர்கள் முதல், கஜனி முகம்மது, கோரி முகம்மது, மூடத் தைமூர், மிஸ் மேயோ, நேற்று அமெரிக்க 'லைப்' பத்திரிகையில் எழுதி யிருக்கும் முட்டாள்

பழக்க வழக்கங்களும் கூட ஹிந்து சமயத்தை அழிக்க முடியவில்லை! இவ்வளவையும் மீறி ஹிந்து சமயத்திலுள்ள ஜீவ சக்தி அதைப் பாதுகாத்து வளர்த்து வருகிறது.

கம்பராமாயணம் முதலிய தமிழ் இலக்கியங்களைப் பற்றி மட்டும் நாம் சிறிது கவலை கொள்ளத்தான் செய்தோம். பள்ளிக்கூடங்களிலும் கலாசாலைகளிலும் படிக்கும் நமது இளைஞர்களிடையே பொருத்தமில்லாத காரணங்களைக் கொண்டு தமிழ் இலக்கியங்களின் பேரில் அவமதிப்பும் வெறுப்பும் வளர்த்து விடப்பட்டன. ஊக்கத்துடன் இலக்கியங்களைக் கற்று அநுபவிக்க வேண்டிய இளம் பிராயத்தில் நம்முடைய சிறந்த இலக்கியங்களின் பேரில் வெறுப்புக் கொள்ளத் தொடங்கிவிட்டால், அதனால் அவ்விளைஞர்களும் நம் தமிழ் நாடும் எவ்வளவு கஷ்டம் அடையும் என்று சொல்ல வேண்டியதில்லை யல்லவா!

கடவுள் சம்பந்தமும், ஹிந்து சமயக் கலப்பும் உள்ள இலக்கியங்களைத் தள்ளிவிட வேண்டுமென்றால், தமிழ் மொழியில் உள்ள இலக்கியச் செல்வத்தில் மிகப் பெரும் பகுதியைத் தள்ளிவிட வேண்டியதாகும். கம்பராமாயணம், திருவிளையாடற் புராணம், சிலப்பதிகாரம், பெருந்தேவனார் பாரதம், தேவாரம், திருவாசகம், திவ்யப்பிரபந்தம், திருப்புகழ், அருட்பா ஆயிரக்கணக்கான அற்புதமான தனிப்பாடல்கள் எல்லாம் போய் விடும். மிஞ்சுகிறவற்றை இலக்கியச் செல்வம் என்று பெருமையுடன் சொல்லிக் கொள்ள இயலாது.

இத்தகைய பெரும் விபத்து தமிழகத்துக்கும் தமிழுக்கும் சேர்ந்து விடாது என்பதற்கு அறிகுறியாக இவ்வாண்டில் காரைக்குடியிலும் தேரழுந்தூரிலும் கம்பர் விழாக்கள் சிறப்பாக நடந்தேறின.

காரைக்குடி கம்பர் விழாவில் அண்ணாமலைப் பல்கலைக் கழகத் தலைவர் டாக்டர் ஆர். கே. சண்முகம் செட்டியார் கலந்து கொண்டதோடு, அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தார் கம்ப ராமாயணத்தின் திருத்தமான பதிப்பு ஒன்று வெளியிடப் போகிறார்கள் என்று அறிவித்தது மிக முக்கியமான சம்பவமாகும்.

கம்பர் பிறந்த தேரழுந்தூரில் பேராசிரியர் ஸ்ரீ சீனிவாச ராகவன் அவர்களுடைய தலைமையில் நடந்த கம்பர் மகாநாட்டை மேற்கூறிய அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தின் உதவி வைஸ்சான்ஸலர் ஸ்ரீ ராமநாத பிள்ளை அவர்கள் திறந்து வைத்ததையும் விசேஷமாகக் குறிப்பிட வேண்டும்.

சர்வகலாசாலைகள் கம்பரிடத்தில் சிரத்தை கொள்ளத் தொடங்கியது மிக முக்கியமான சம்பவம் என்றால், நம் காலத்து ஆங்கில எழுத்தாளரில் தலை சிறந்து விளங்கும் "ஹிந்து" துணை ஆசிரியர் ஸ்ரீ என். ரகுநாதன் அவர்கள் கம்பர் மகாநாட்டில் கலந்து கொண்டதும் தமிழ் இலக்கியம் உண்மையாகவே பெருமையடையப் போகிறது என்பதற்கு அறிகுறியாகும்.

காரைக்குடி கம்பர் விழாவை நடத்த ஸ்ரீ சா. கணேசன் கிடைத்திருப்பது போல் தேரழுந்தூர் விழாவைப் பொறுப்பேற்று நடத்த இவ்வாண்டில் மேனுங்குடி ஸ்ரீ மருதவாணம் பிள்ளை அவர்கள் முன் வந்ததும் குறிப்பிடத் தக்கது.

கம்பர் பிறந்த சோழ நாட்டிலும், கம்பரைச் சுவீகாரம் கொண்ட செட்டிமார் நாட்டிலும் தமிழன்பர்கள் ஆண்டுதோறும் கம்பர் விழாக்களைப் போட்டியிட்டுக்கொண்டு நடத்திக் கன்னித் தமிழை வளர்ப்பார்கள் என்று எதிர்பார்க்கிறோம்.

# உரிமைப் போரின் உச்ச நிலை

இலங்கை இந்தியர்களின் உரிமைப் போர் இப்போது உச்ச நிலையை அடைந்து விட்டது. இலங்கைப் பிரதமர் ஸ்ரீ டட்லி சேனநாயகாவின் திடீர்த் தேர்தல் அறிவிப்பே அத்தகைய நெருக்கடியான நிலைமைக்குக் காரணம்.

தலைமுறை தலைமுறையாக இலங்கையின் செழுமைக்காகப் பாடுபட்டு உழைத்த பத்து லட்சம் இந்தியர்களுக்குப் பிரஜா உரிமை மறுக்கப்படுவது இது வரையில் ஏட்டளவில் இருந்தது. ஆனால் இப்போதோ அந்த அநீதியைச் செயலிலும் நிறைவேற்ற இலங்கை சர்க்கார் முன் வந்திருப்பது வருத்தத்தக்க விஷயமாகும்.

பிரஜா உரிமை கோரி இரண்டரை லட்சம் இலங்கை இந்தியர்கள் சமர்ப்பித்துள்ள மனுக்கள் சம்பந்தப்பட்ட வரையில் இலங்கை சர்க்கார் இன்னும் யாதொரு முடிவும் செய்யவில்லை. ஏற்கெனவே அமுலில் இருந்த வாக்காளர் ஜாபிதாவிலிருந்து இந்தியர்களின் பெயர்களை அகற்றிவிட்டார்கள். புதிய வாக்காளர் ஜாபிதா இன்னும் பூர்த்தியாகவில்லை. பத்து லட்சத்துக்கு மேற்பட்ட ஜனங்களின் பிரதிநிதியாக பார்லிமெண்டில் ஒருவருக்குக் கூட இடம் கிடைக்க வழியில்லையெனில், அத்தகைய தேர்தல் முறையை ஜனநாயக தர்மத்துக்கு உகந்ததாகக் கருத முடியுமா!

இவ்விஷயமாக நமது இலங்கை நிருபர் எழுதியுள்ள காரசாரமான கடிதம் இலங்கையில் உள்ள இந்திய மகா ஜனங்களின் உண்மையான மன நிலையைப் பிரதிபலிக்கிறது.

இலங்கை இந்தியர்கள் விஷயத்தில் இந்திய சர்க்கார் இது வரையில் யாதொரு முயற்சியும் எடுத்துக் கொள்ளவில்லை; கும்பகர்ணனைப் போல் நெடுங்காலம் தூங்கி வழிந்து விட்டு நிலைமை முற்றிய பின் விழித்துக் கொண்டிருக்கிறார்கள் என்று நமது நிருபர் கூறுகிறார்.

அண்டை நாடான இலங்கையுடன், சரித்திர காலந் தொட்டுச் சகல துறைகளிலும் இந்தியாவுடன் நெருங்கிய தொடர்பு கொண்டுள்ள இலங்கையுடன் சௌஜன்யமாகப் போக வேண்டும் என்ற நோக்கத்துடனேயே, இது வரையில் அவ்விஷயமாக இந்திய சர்க்கார் தீவிர முறைகள் எதையும் கைக் கொள்ள வில்லை.

கும்பகர்ணனை விழித்துக் கொள்ளும்படி செய்வது கஷ்டமான காரியந்தான். ஆனால், அவன் விழித்துக் கொண்டு விட்டால்...!

இந்திய சர்க்கார் சார்பில் இலங்கையில் உள்ள இந்தியா ஹை கமிஷனர் இலங்கைப் பிரதமரைக் கண்டு பேசி யிருக்கிறார்.

இலங்கை சர்க்கார் நிர்வாகத்தை ஏற்றுக் கொண்டுள்ள புதிய பிரதமர் ஸ்ரீ டட்லி சேனநாயகா நிதானமாகவும் ஜனநாயக தர்மத்துக்கு முரணின்றியும் நடந்து கொண்டு அங்கு ஏற்பட்டுள்ள நெருக்கடியைச் சுமுகமாகத் தீர்த்து வைப்பார் என்று எதிர்பார்க்கிறோம். இலங்கையின் ஜனத்தொகையில் ஆறில் ஒரு பங்கு உள்ள மாபெரும் சமூகத்தினரான இந்தியர்களுக்கு நீதி கிடைக்கும் என்று நம்புகிறோம்.



# பொன்னியின் செல்வன்





## அத்தியாயம் 19

## சமய சஞ்சீவி

நம்பியாண்டார் நம்பிக்கு நடந்த உபசாரத்தின்போது பினாகபாணி அந்த சபா மண்டபத்துக்குள் பிரவேசிக்க முடியவில்லை. வாசற்படிக்கு அப்பால் நின்ற கூட்டத்தில் நின்று உள்ளே பார்த்துக் கொண்டிருந்தான். வந்தியத் தேவனுடைய கவனம் வேறு இடத்தில் இருந்தது என்பதை முன்னமே பார்த்தோம். பினாகபாணியோ வந்தியத்தேவன் முகத்தையே உற்று நோக்கிக் கொண்டிருந்தான். இவ்வளவையும் பார்த்தும் பார்க்காதது போல் கவனித்துக் கொண்டிருந்தான் இன்னொருவன். அவன்தான் நம் பழைய தோழனாகிய ஆழ்வார்க்கடியான்.

இளவரசர் மதுராந்தகருக்கு நிமித்தம் பார்த்துச் சொல்லி அவர் மனத்தைக் கலக்கி விட்டு வந்தியத்தேவன் அரண்மனைக்கு வெளியில் வந்தான். அங்கே சற்றுத் தூரத்தில் நின்று காத்துக் கொண்டிருந்த வைத்தியர் மகன் அவனை நெருங்கி வந்து, "அப்பனே! நீ யார்?" என்று கேட்டான். வந்தியத் தேவன் பினாகபாணியைப் பார்த்துத் திடுக்கிட்டான். அதை வெளியில் காட்டிக் கொள்ளாமல், "என்ன கேட்டாய்?" என்றான்.

"நீ யார் என்று கேட்டேன்."

"நான் யார் என்று கேட்கிறாய்? எந்த நானைக் கேட்கிறாய்? மண், நீர், தேயு, வாயு, ஆகாசம் என்கிற பஞ்ச பூதங்களினாலான இந்த உடம்பைக் கேட்கிறாயா? இந்த உடம்புக்குள் மறைந்திருக்கும் உயிரைக் கேட்கிறாயா? உயிருக்கு ஆதாரமான ஆத்மாவைக் கேட்கிறாயா? ஆத்மாவுக்கும் அடிப்படையான பரமாத்மாவைக் கேட்கிறாயா? அப்பனே! இது என்ன கேள்வி? நீயும் இல்லை; நானும் இல்லை. எல்லாம் இறைவன் மயம்! உலகம் என்பது மாயை. பசு, பதி, பாசத்தின் உண்மையைத் திருநாரையூர் நம்பியைப் போன்ற பெரியோர்களைக் கேட்டுத் தெரிந்து கொள்!" என்று கூறிவிட்டு வந்தியத்தேவன் அரண்மனை வாசலில் நின்ற தன் குதிரை மேல் தாவி ஏறினான். குதிரையைச் சிறிது நேரம் வேகமாகச் செலுத்திய பிறகு வைத்தியர் மகன் தன்னைப் பின் தொடரவில்லை என்று தெரிந்து கொண்டு மெள்ள மெள்ள விட்டுக் கொண்டு போனான்.

ஆனால் வைத்தியர் மகன் அவ்வளவு எளிதில் ஏமாந்து போகிறவனா? அவனுடைய சந்தேகம் இப்போது நிச்சயமாகி விட்டது. நகர் காவல் அதிகாரியிடம் சென்று செய்தியைத் தெரிவித்தான். அதிகாரி அனுப்பிய இரண்டு காவல் வீரர்களை அழைத்துக் கொண்டு அவனும் ஊரைச் சுற்றி வந்தான். அவன் எதிர்பார்த்தது போலவே வந்தியத் தேவனை ஒரு நாற்சந்தியில் சந்தித்தான்.

"இவன்தான் ஒற்றன்! இவனைச் சிறைப் பிடியுங்கள்!" என்று கூவினான்.

"என்னடா, அப்பா! உனக்குப் பைத்தியமா?" என்றான் வல்லவரையன்.

"யாரைப் பைத்தியமா என்று கேட்கிறாய்? இந்த உடம்பையா, இதற்குள் இருக்கும் உயிரையா, ஆத்மாவையா, பரமாத்மாவையா! அல்லது பசு, பதி, பாசத்தையா?" என்று கூறினான் வைத்தியர் மகன் பினாகபாணி.

கல்கி

"நீ இப்பொழுது உளறுவதிலிருந்தே நீ பைத்தியம் என்று தெரிகிறதே!"

"நான் பைத்தியம் இல்லை; உன்னோடு கோடிக்கரை வரையில் வந்த வைத்தியன்! காவலர்களே! தஞ்சாவூர்க் கோட்டையிலிருந்து தப்பி இலங்கைக்கு ஓடிய ஒற்றன் இவன்தான்! உடனே இவனைச் சிறைப் பிடியுங்கள்!"

காவலர்கள் வல்லவரையனை நோக்கி நெருங்கினார்கள்.



"ஜாக்கிரதை! இவன் சொல்வதைக் கேட்டுத் தவறு செய்யாதீர்கள்! நான் இளவரசர் மதுராந்தகத் தேவரோடு வந்த நிமித்தக்காரன்!" என்று கூறினான் வந்தியத் தேவன்.

"இல்லை, இல்லை! இவன் பெரும் பொய்யன். இவனை உடனே சிறைப்படுத்துங்கள்!" என்று வைத்தியர் மகன் வாய் விட்டுக் கூவினான்.

இதற்குள் அவர்களைச் சுற்றிலும்

பலருக்கு வந்தியத்தேவன்மேல் அனுதாபம் உண்டாகி விட்டது. அவனை எப்படியாவது தப்புவிக்க வழி உண்டா என்று பார்த்தார்கள்.

இதற்கிடையில் ஆழ்வார்க்கடியான் அந்தக் கூட்டத்தின் ஓரத்தில் வந்து சேர்ந்தான். "இளவரசரோடு வந்த நிமித்தக்காரன் இங்கே இருக்கிறானா?" என்று கூவினான்.

"இதோ இருக்கிறேன்!" என்றான் வந்தியத் தேவன்.

"இல்லை; இவன் ஒற்றன்!" என்று பினாகபாணி கூச்சலிட்டான்.

"இதென்ன வம்பு? நீ மதுராந்தகத் தேவருடன் வந்த நிமித்தக் காரனாயிருந்தால் என்னுடன் வா! உன்னை இளவரசி அழைத்து வரச் சொன்னார்!" என்றான் ஆழ்வார்க்கடியான்.

வந்தியத்தேவனின் உள்ளம் துள்ளிக் குதித்தது. "அந்த நிமித்தக்காரன் நான்தான்! இதோ வருகிறேன்" என்றான்.

"விடாதீர்கள்! ஒற்றனை விட்டு விடா

இப்படிச் சொல்லி வாய் மூடுவதற்குள் குதிரைகள் ஜனக் கூட்டத்தை நெருங்கி விட்டன. ஜனங்கள் மேலே போக வழி விடாதபடியால் குதிரைகள் நின்றன.

"நீங்கள் தூதர்கள் போலிருக்கிறது. என்ன செய்தி கொண்டு வருகிறீர்கள்?" என்று ஆழ்வார்க்கடியான் கேட்டான்.

"ஆம், நாங்கள் தூதர்கள்தான்! துக்கச் செய்தி கொண்டு வருகிறோம்! இளவரசர் அருள்மொழி வர்மர் ஏறி வந்த கப்பல் சுழற்காற்றில் அகப்பட்டுக் கொண்டதாம். இளவரசர் யாரையோ காப்பாற்றுவதற்காகக் கடலில் குதித்து முழுகிப்போய் விட்டாராம்!"



குதிரை மீது வந்தவர்களில் ஒருவன் இவ்வாறு கூறியதும் அந்த ஜனக் கூட்டத்தில் "ஐயோ!" "ஐயகோ!" என்ற பரிதாபக் குரல்கள் நெஞ்சு பிளக்கும்படியான சோகத் தொனியில் எழுந்தன.

எங்கிருந்துதான் அவ்வளவு ஜனங்களும் வந்தார்களோ, தெரியாது. அவ்வளவு சீக்கிரத்தில் அவர்கள் எப்படி வந்து சேர்ந்தார்கள் என்றும் சொல்ல முடியாது. ஆண்களும், பெண்களும் வயோதிகர்களும், சிறுவர், சிறுமிகளும் அந்தத் தூதர்களைப் பெருங் கூட்டமாகச் சூழ்ந்து கொண்டார்கள். பலர் அவர்களைப் பல கேள்விகள் கேட்டார்கள். பலர் அழுது புலம்பினார்கள்.

பழுவேட்டரையர்கள் அருள்மொழி வர்மரை விரும்பவில்லை யென்பது அந்நகர மக்களில் பலருக்கு ஏற்கெனவே தெரியும். இளவரசரைச் சிறைப்படுத்திக் கொண்டு வருவதற்காகப் பழுவேட்டரையர்கள் ஈழத்துக்கு ஆள் அனுப்பி யிருக்கிறார்கள் என்ற பிரஸ்தாபமும் அவர்கள் காதுக்கு எட்டி யிருந்தது. எனவே, கூட்டத்தில் பலர் பழுவேட்டரையர்களைப் பற்றி முதலில் முணு முணுக்கத் தொடங்கினார்கள். பிறகு உரத்த குரலில் சபிக்கவும் தொடங்கினார்கள். "பழுவேட்டரையர்கள் வேண்டுமென்றே இளவரசரைக் கடலில் மூழ்க அடித்துக் கொன்றிருக்க வேண்டும்!" என்றும் ஒருவருக்கொருவர் பேசிக் கொண்டார்கள். அந்த ஜனக் கூட்டத்தார் பேசிக் கொண்ட சத்தமும் அவர்கள் புலம்பிய சத்தமும் பழுவேட்டரையர்களைச் சபித்த சத்தமும் சேர்ந்து சமுத்திரத்தின் பேரிரைச்சலைப்போல் எழுந்தது.

இந்தக் கூட்டத்துக்கு மத்தியில் அகப்பட்டுக்கொண்ட தஞ்சாவூர்த் தூதர்கள் மேலே அரண்மனைக்குப் போக முடியாமல் தவித்தார்கள். ஜனங்களை விலக்கிக்கொண்டு போக அவர்கள் முயன்றும் பலிக்கவில்லை. "எப்படி?" "எங்கே?" "என்றைக்கு?" "நிச்சயமாகவா?" என்றெல்லாம் ஜனங்கள் அத்



தூதர்களைக் கேட்ட வண்ணம் மேலே போக முடியாதபடி தடை செய்தார்கள்.

வைத்தியர் மகனுடன் வந்திருந்த காவலர்களைப் பார்த்து ஆழ்வார்க்கடியான், "நீங்கள் ஏன் சும்மா நிற்கிறீர்கள்? கூட்டத்தை விலக்கித் தூதர்களை அரண்மனைக்கு அழைத்துச் செல்லுங்கள்!" என்றான். காவலர்களும் மேற்படி செய்தி கேட்டுக் கதிகலங்கிப் போயிருந்தார்கள். அவர்கள் இப்போது முன்வந்து தூதர்களுக்கு வழிவிலக்கிக் கொடுக்க முயன்றார்கள். தூதர்கள் சிறிது சிறிதாக அரண்மனையை நோக்கி முன்னேறினார்கள். ஜனக்கூட்டமும் அவர்களை விடாமல் தொடர்ந்து சென்றது. மேலும் மேலும் ஜனங்களின் கூட்டம் பெருகிக் கொண்டும் வந்தது.

அவ்வளவு பெரிய ஜனக்கூட்டத்தில், ஒரே மனதாக இளவரசர் அருள்மொழி வர்மரின் கதியை நினைத்துக் கலங்கிப் புலம்பிக் கொண்டிருந்த கூட்டத்தில், ஒரே ஒரு பிராணி மட்டும், "ஐயோ! இது ஏதோ சூழ்ச்சி! ஒற்றனைத் தப்பித்துவிடச் சூழ்ச்சி!" என்று அலறிக் கொண்டிருந்தது. அவ்வாறு அலறிய வைத்தியர் மகனை யாரும் பொருட்படுத்தவில்லை. அவனுடைய கூக்குரல் யாருடைய செவியிலும் ஏறவில்லை. மாநதியின் பெருவெள்ளம். அதில் விழுந்துவிட்ட சிறு துரும்பை அடித்துக் கொண்டு போவதுபோல் அந்தப் [illegible] ஜனக்கூட்டம் வைத்தியர் மகனையும் தள்ளிக்கொண்டு முன்னே சென்றது.

ஜனக்கூட்டம் சேரத் தொடங்கிய போதே வந்தியத்தேவன் குதிரை மேலிருந்து இறங்கி விட்டான். கூட்டம் நகரத் தொடங்கியபோது ஆழ்வார்க்கடியான் அவன் அருகில் வந்து அவன் கையைப் பற்றிக் கொண்டான். "குதிரையை விட்டுவிடு! பிறகு அதைத் தேடிப் பிடித்துக் கொள்ளலாம். உடனே என்னுடன் வா!" என்று அவன் காதோடு சொன்னான்.



"அப்பனே! சமய சஞ்சீவியாக வந்து சேர்ந்தாய்! இல்லாவிடில் என் நிலைமை என்ன ஆகியிருக்குமோ, தெரியாது!" என்றான் வல்லவரையன்.

"இதுதான் உன் தொழில் ஆயிற்றே? நீ சங்கடத்தில் அகப்பட்டுக்



கொள்ள வேண்டியது; யாராவது வந்து உன்னை அந்த நெருக்கடியிலிருந்து விடுவிக்க வேண்டியது!" என்று எகத்தாளம் செய்தான் ஆழ்வார்க்கடியான்.

இருவரும் ஜனக்கூட்டம் அவர்களைத் தள்ளிக்கொண்டு போகாத வண்ணம் வீதி ஓரமாக ஒதுங்கி நின்றார்கள். கூட்டம் போன பிறகு வந்தியத் தேவனுடைய கையை ஆழ்வார்க்கடியான் பற்றிக்கொண்டு வேறு திசையாக அவனை அழைத்துச் சென்றான்.

அரண்மனைகள் இருந்த வீதியில் முன்னொரு தடவை நாம் பார்த்திருக்கும் பூட்டிக் கிடந்தகோடி வீட்டில் அவர்கள் புகுந்தார்கள். கொல்லைப் புறத்தில் இருந்த நந்தவனத்தில், பிரவேசித்துக் கொடி வழிகளில் நடந்தார்கள். சிறிது நேரத்துக் கெல்லாம் நீல நிற ஓடை தெரிந்தது. அதில் ஒரு ஓடம் மிதந்தது. ஓடத்தில் ஒரு மாதரசி இருந்தாள். அவளைக் கண்டதும் வந்தியத் தேவனுடைய உள்ளம் துள்ளிக் குதித்தது.

## அத்தியாயம் 20

# தாயும் மகனும்

அன்னை அழைத்து வரச் சொன்னதாகச் சேவகன் வந்து கூறியதன் பேரில் மதுராந்தகன் செம்பியன் மாதேவியைப் பார்க்கச் சென்றான். சிவ பக்தியிற் சிறந்த அந்த மூதாட்டியின் புகழ் நாடெங்கும் பரவி யிருந்தது. ஒரு காலத்தில் மதுராந்தகனும் அன்னையிடம் அளவிலாத பக்தி கொண்டிருந்தான். இப்போது அந்த பக்தி கோப வெறியாக மாறிப் போயிருந்தது. பெற்ற மகனுக்குத் துரோகம் செய்து தாயாதிகளின் கட்சி பேசிய தாயைப் பற்றிக் கதைகளிலே கூடக் கேட்டதில்லையே! தனக்கு இப்படிப்பட்ட அன்னையா வந்து வாய்க்க வேண்டும்?...இதை நினைக்க நினைக்க அவன் உள்ளத்திலிருந்து அன்பு அத்தனையும் துவேஷமாகவே மாறி நாளடைவில் கொழுந்து விட்டு வளர்ந்திருந்தது.

அபூர்வமான சாந்தம் குடி கொண்ட அன்னையின் முகத்தைப் பார்த்ததும் கொஞ்சம் அவனுடைய கோபம் தணிந்தது. பழைய வழக்கத்தை அனுசரித்து நமஸ்கரித்து எழுந்து நின்றான். "சிவ பக்திச் செல்வம் பெருகி வளரட்டும்!" என்று மகாராணி ஆசி கூறி அவனை ஆசனத்தில் உட்காரச் செய்தார்.

அந்த ஆசீர்வாதம் மதுராந்தகனுடைய மனதில் அம்பைப் போல் தைத்தது.

"மதுராந்தகா! என் மருமகள் சுகமா? உன் மாமனார் வீட்டிலும் தனாதிகாரியின் வீட்டிலும் எல்லாரும் சௌக்கியமா?" என்று அன்னை கேட்டார்.

"எல்லாரும் சௌக்கியமாகவே இருக்கிறார்கள். அதைப் பற்றித் தங்களுக்கு என்ன கவலை?" என்று குமாரன் மூணு மூணுத்தான்.

"தஞ்சையிலிருந்து புறப்படுவதற்கு முன்னால் நீ சக்கரவர்த்தியைப் பார்த்தாயா? அவருடைய உடல் நலம் தற்சமயம் எப்படி யிருக்கிறது?" என்று மகாராணி கேட்டார்.

"பார்த்து விடை பெற்றுக் கொண்டுதான் புறப்பட்டேன். சக்கரவர்த்தியின் உடம்பு நாளுக்கு நாள் நலிந்துதான் வருகிறது. உடல் வேதனையைக் காட்டிலும் மன வேதனை அவருக்கு அதிகமாகியிருக்கிறது!" என்றான் மதுராந்தகன்.

"அது என்ன, குழந்தாய்? சக்கரவர்த்தி மன வேதனைப் படும்படியாக என்ன நேர்ந்தது?"

"குற்றம் செய்தவர்கள்,—அநீதி செய்தவர்கள்,—பிறர் உடைமையைப்பறித்து அநுபவிக்கிறவர்கள்,—மன வேதனை கொள்வது இயல்பு தானே?"

"இது என்ன சொல்கிறாய்? சக்கரவர்த்தி அவ்வாறு என்ன குற்றம்,—அநீதி,—செய்து விட்டார்?"

"வேறு என்ன செய்ய வேண்டும்? நான் இருக்க வேண்டிய சிம்மாசனத்தில் அவர் இத்தனை வருஷங்களாக அமர்ந்திருப்பது போதாதா? அது குற்றம் இல்லையா? அநீதி இல்லையா?"

"குழந்தாய்! பால் போலத் தூய்மையாக இருந்த உன் உள்ளத்தில் இந்த விஷம் எப்படி வந்தது? யார் உனக்குத் துர்ப்போதனை செய்து கெடுத்து விட்டார்கள்?" என்று இரக்கமான குரலில் அன்னை கேட்டார்.

"எனக்கு ஒருவரும் துர்ப்போதனை செய்து கெடுக்கவில்லை. தங்கள் மகனை அவ்வளவு நிர்மூடனாக ஏன் கருதுகிறீர்கள்? எனக்குச் சுய அறிவே கிடையாது என்பது தங்கள் எண்ணமா?"

"எத்தனை அறிவாளிகளா யிருந்தாலும் துர்ப்போதனையினால் மனம் கெடுவது உண்டு. கரைப்பவர்கள் கரைத்தால்

கல்லுங் கரையும் அல்லவா? கூனியின் துர்ப்போதனையினால் கைகேசியின் மனம் கெட்டுப் போகவில்லையா?"

"பெண்களின் மனதை அப்படித் துர்ப்போதனையினால் கெடுத்து விடலாம் என்பதை நானும் தெரிந்து கொண்டு தானிருக்கிறேன்."

"மதுராந்தகா! யாரைக் குறிப்பிட்டுச் சொல்கிறாய்?"

"தாயே! என்னை எதற்காக அழைத்தீர்கள்? அதைச் சொல்லுங்கள்!"

"சற்று முன் நடந்த வைபவத்தில் நீ பிரசன்னமா யிருந்தாய் அல்லவா?"

"இருந்தேன். யாரோ வழியோடு போகிற சிறுவனைப் பல்லக்கிலேற்றி அழைத்துவரச் செய்தீர்கள். சிம்மாசனத்தில் ஏற்றி வைத்து உபசரித்தீர்கள். அவன் தலை கால் தெரியாத கர்வம் கொண்டிருப்பான்......"

"ஐயோ! அப்படி அபசாரமாய்ப் பேசாதே, குழந்தாய்! வந்திருந்தவர் வயதில் வாலிபரானாலும் சிவஞான பரிபக்குவம் அடைந்த மகான்......"

"அவர் மகானாகவே யிருக்கட்டும். நான் குறைத்துப் பேசினால் அவருடைய பெருமை குறைந்து விடாதல்லவா? அந்த மகானுக்குத் தாங்கள் இராஜரீக மரியாதைகள் செய்ததையும் நான் ஆட்சேபிக்கவில்லை. என்னை எதற்காக அழைத்தீர்கள் என்று சொல்லுங்கள்!"

செம்பியன்மாதேவி ஒரு நெடிய பெருமூச்சு விட்டார். பிறகு கூறினார்:—

"உன்னுடைய குணத்தில் ஏற்பட்டிருக்கும் மாறுதல் எனக்குப் பிரமிப்பை உண்டாக்குகிறது. பழுவேட்டரையர் மாளிகையில் இரண்டு வருஷ வாசம் இப்படி உன்னை மாற்றிவிடும் என்று நான் கனவிலும் நினைக்கவில்லை. போனால் போகட்டும். என்னுடைய கடமையை நான் செய்ய வேண்டும். உன் தந்தைக்கு நான் அளித்த வாக்குறுதியை நிறைவேற்ற என்னாலியன்ற வரையில் முயல வேண்டும். மகனே! உன்னை அழைத்த காரியத்தைச் சொல்வதற்கு முன்னால், என்னுடைய கதையை,—நான் உன் தந்தையை மணந்த வரலாற்றைக் கூற வேண்டும். சற்றுப் பொறுமையாகக் கேட்டுக் கொண்டிரு!"

மதுராந்தகன் பொறுமையுடன் கேட்டுக் கொண்டிருக்கப் போவதற்கு அறிகுறியாகக் கால்களை மண்டி போட்டுக் கொண்டு கைகளைப் பீடத்தில் நன்றாய் ஊன்றிக் கொண்டு உட்கார்ந்தான்.

"நான் பிறந்த ஊராகிய மழபாடிக்கு நீ குழந்தையா யிருந்தபோது இரண்டொரு தடவை வந்திருக்கிறாய். அந்த ஊரில் உள்ள சிவபெருமான் ஆலயத்தையும் பார்த்திருக்கிறாய். கோச்செங்கட் சோழ மன்னர் சிவாலயம் எடுப்பித்த அறுபத்து நாலு ஸ்தலங்களில் அதுவும் ஒன்று எனப் பெரியோர்கள் சொல்லிக் கேட்டிருக்கிறேன். உன்னுடைய பாட்டனார், என்னுடைய தந்தை, மழபாடியில் பெரிய குடித்தனக்காரர். எங்கள் குலம் தொன்மையானது. ஒரு காலத்தில் மழவரையர்கள் செல்வாக்குப் பெற்ற சிற்றரசர்களாயிருந்தார்கள். விஜயாலய சோழர் காலத்தில் நடந்த யுத்தங்களில் பாண்டியர்களோடு சேர்ந்திருந்தார்கள். அதனால் சோழர்கள் வெற்றி பெற்ற பிறகு மழவரையர்களின் செல்வாக்குக் குன்றி யிருந்தது. சிறு பெண்ணா யிருந்தபோது அதைப் பற்றியெல்லாம் நான் குறைப்படவில்லை. என் உள்ளம் மழபாடி ஆலயத்தில் உள்ள நடராஜப் பெருமான் மீது சென்றிருந்தது. மழபாடியின் சரித்திரத்தில் நிகழ்ந்த ஒரு வரலாற்றை ஒரு பெரியவர் நான் குழந்தையா யிருந்தபோது எனக்குச் சொன்னார். சுந்தரமூர்த்தி சுவாமிகள் தமது சீடர்களுடனே எங்களூர்ப் பக்கமாகப் போய்க்கொண் டிருந்தார். மழபாடி சிவாலயத்தைச் சுற்றிச் செழித்து வளர்ந்து கொத்துக் கொத்தாகப் பூத்துக் குலுங்கிய கொன்னை மரங்கள் ஆலயத்தை மறைத்திருந்தனவாம். ஆகையால் கோயிலைக் கவனியாமல் சுந்தரர் சென்றாராம். 'சுந்தரம்! என்னை மறந்தாயோ!' என்ற குரல் அவர் காதில் கேட்டதாம். சுந்தரர் சுற்று முற்றும் பார்த்து 'யாராவது ஏதேனும் சொன்னீர்களா?' என்று கேட்டாராம். சீடர்கள் இல்லை என்றார்களாம். தங்கள் காதில் குரல் எதுவும் கேட்கவில்லை என்றும் சொன்னார்களாம். சுந்தரர் உடனே அருகில் ஏதாவது ஆலயம் மறைந்திருக்கிறதா என்று விசாரித்தாராம். கொன்னை மரங்களுக்கிடையில் மறைந்திருந்த மழபாடி திருக்கோயிலைக் கண்டு பிடித்து ஓடிவந்து இறைவன் சந்நிதியில் 'பொன்னார் மேனியனே!' என்ற பதிகத்தைப் பாடினாராம். இந்த வரலாற்றைக் கேட்டது முதற் கொண்டு,

'மன்னே! மாமணியே!
மழபாடியுள் மாணிக்கமே!
அன்னே உன்னையல்லால்
இனி யாரை நினைக்கேனே!'

# ராணுவத்தின் உதவி!




"இந்திய ராணுவம் ராயல சீமைப் பஞ்சப் பிரதேசங்களுக்கு உதவி செய்ய விரைந்திருக்கிறது." —செய்தி

என்ற வரிகள் என் மனதில் பதிந்துவிட்டன. கோவிலுக்கு அடிக்கடி போவேன். நடராஜ மூர்த்தியின் முன்னால் நின்று அந்த வரிகளை ஓயாது சொல்லுவேன். நாளாக ஆக, என் உள்ளத்தில் மழுபாடி இறைவர் குடிகொண்டு விட்டார். சிவபெருமானையே நான் மணந்து கொள்ளப் போவதாக மனக் கோட்டை கட்டினேன். என்னை நான் உமையாகவும், பார்வதியாகவும், தாட்சாயணியாகவும் எண்ணிக் கொள்வேன். அவர்கள் சிவபெருமானைப் பதியாக அடைவதற்குத் தவம் செய்தது போல நாளும் கண்ணை மூடிக்கொண்டு தவம் செய்வேன். யாராவது என் கலியாணத்தைப் பற்றிய பேச்சு எடுத்தால் வெறுப்பு அடைவேன். இவ்விதம் என் குழந்தைப் பருவம் சென்றது. மங்கைப் பருவத்தை அடைந்தபோது என் உள்ளம் சிவபெருமானுடைய பக்தியில் முன்னைவிட அதிகமாக ஈடுபட்டது. வீட்டாரும் ஊராரும் என்னைப் 'பிச்சி' என்று சொல்ல ஆரம்பித்தார்கள். அதையெல்லாம் நான் பொருட்படுத்தவேயில்லை. வீட்டில் உண்டு உறங்கிய நேரம் போக மிச்சப் பொழுதையெல்லாம் கோவிலிலேயே கழித்தேன். பூஜைக்குரிய மலர்களைப் பறித்து விதம் விதமான மாலைகளைத் தொடுத்து நடராஜப் பெருமானுக்கு அணியச் செய்து பார்த்து மகிழ்வேன். நெடுநேரம் கண்ணை மூடிக் கொண்டு தியானத்தில் ஆழ்ந்திருப்பேன். இவ்விதம் ஒரு நாள் கண்ணை மூடிக்கொண்டு மனதில் இறைவனையே தியானித்துக் கொண்டிருந்த போது திடீரென்று கலகலவென்று சத்தம் கேட்டுக் கண் விழித்துப் பார்த்தேன். என் எதிரே ஐந்தாறு பேர் நின்று கொண்டிருந்தார்கள். அவர்களில் முன்னால் நின்ற ஒருவர் மீதுதான் என் கண்களும் கருத்தும் சென்றன. நான் மனத்தில் தியானித்துக் கொண்டிருந்த சிவபெருமான் தாமே தம் பரிவாரங்களுடன் என்னை ஆட்கொள்ள வந்துவிட்டார் என்று எண்ணிக் கொண்டேன். எழுந்து நின்று தலை குனிந்து வணங்கி நின்றேன். என் கண்களிலிருந்து தாரை தாரையாய்க் கண்ணீர் பொழிந்தது. இதை அவர் கவனித்திருக்க வேண்டும். 'இந்தப் பெண் யார்? இவள் ஏன் கண்ணீர் விட்டு அழுகிறாள்?'' என்று ஒரு குரல் கேட்டது. அதற்கு என் தந்தையின் குரல் 'இவள் என் மகள். பிஞ்சிலே பழுத்தவளைப் போல் இவளுக்கு இப்போதே சிவபக்தி வந்துவிட்டது. ஓயாமல் இப்படிக் கோவிலில் வந்து உட்கார்ந்து கண்ணை மூடிக் கொண்டு தியானம் செய்வதும் பதிகம் பாடுவதும் கண்ணீர் விடுவதுமாயிருக்கிறாள்!' என்று கூறிய மறுமொழி என் காதில் விழுந்தது. மறுபடி நான்

நிமிர்ந்து பார்த்தபோது முன்னால் நின்றவர் சிவபெருமான் இல்லையென்றும் யாரோ அரச குலத்தவர் என்றும் தெரிந்து கொண்டேன். எனக்கு அவமானம் தாங்கவில்லை. அங்கிருந்து ஒரே ஓட்டமாக ஓடிப்போய் வீட்டை அடைந்தேன். ஆனால் என்னை ஆட்கொண்டவர் என்னை விடவில்லை. என் தந்தையுடன் எங்கள் வீட்டுக்கே வந்து விட்டார். மகனே! அவர்தான் என் கணவரும் உன் அருமைத் தந்தையாகிய கண்டராதித்த தேவர்!"

இவ்விதம் கூறி விட்டுப் பெரிய மகாராணி சிறிது நிறுத்தினார். பழைய நினைவுகள் அவருடைய கண்களில் மீண்டும் கண்ணீர்த் துளிகளை வருவித்தன. கண்ணைத் துடைத்துக் கொண்டு மறுபடியும் கூறினார் :—

"பிறகு உன் தந்தையைப் பற்றிய விவரங்களைத் தெரிந்து கொண்டேன். அவர் சிறிது காலத்துக்கு முன்புதான் சோழநாட்டின் சிம்மாசனத்தில் அமர்ந்தார். அது முதல் பற்பல சிவஸ்தலங்களுக்கும் சென்று ஆலய தரிசனம் செய்து வந்தார். அவருக்குப் பிராயம் அப்போது நாற்பதாகியிருந்தது. இளம் வயதில் அவர் மணந்து கொண்டிருந்த மாதரசி காலமாகி விட்டாள். மறுபடி கலியாணம் செய்து கொள்ளும் எண்ணமே அவருக்கு இருக்கவில்லை. மீண்டும் மணம் புரிந்து கொள்வதில்லையென்று விரதம் கொண்டிருந்தார். ஆனால் அவருடைய புனித உள்ளம் இந்தப் பேதையைக் கண்டதினால் சலனமடைந்தது. என் தந்தையின் முன்னிலையில் என் விருப்பத்தை அவர் கேட்டார். நானோ, சிவபெருமானே மனித உருவங்கொண்டு என்னை ஆட்கொள்ள வந்திருப்பதாக எண்ணிப் பரவசம் கொண்டிருந்தேன். அவரை மணந்து கொள்ளப் பூரண சம்மதம் என்பதைத் தெரிவித்தேன். எங்களுக்கு விரைவில் திருமணம் நடந்தது. அதன் பயனாக உன் பாட்டனார் இழந்திருந்த செல்வாக்கை மீண்டும் அடைந்து 'மழவரையர்' என்ற பட்டப் பெயரையும் பெற்றார்....

"மகனே! எனக்கும் உன் தந்தைக்கும் திருமணம் நடந்த பிறகு நாங்கள் இருவரும் மனம் விட்டுப் பேசி ஒரு முடிவுக்கு வந்தோம். சிவபெருமானுடைய திருப்பணிக்கே எங்கள் வாழ்க்கையை அர்ப்பணம் செய்வது என்றும், இருவரும் மகப் பேற்றை விரும்புவதில்லை என்றும் தீர்மானித்திருந்தோம். அதற்கு ஒரு முக்கிய காரணம் இருந்தது. குழந்தாய்! இதையெல்லாம் உன்னிடம் சொல்ல வேண்டிய அவசியம் ஏற்படும் என்று நான் கனவிலும் கருதவில்லை. ஆயினும் அத்தகைய அவசியம் நேர்ந்து விட்டதனால் சொல்லுகிறேன். கொஞ்சம் செவி கொடுத்துக் கவனமாகக் கேள்!"

இவ்விதம் செம்பியன் மகாதேவி கூறி மீண்டும் ஒரு நெடு மூச்சு விட்டார். மதுராந்தகனும் முன்னைக் காட்டிலும் அதிக சிரத்தையுடன் காது கொடுத்துக் கேட்கத் தொடங்கினான்.

## பிரபல திருமணம்



திருவெண்காடு நாதஸ்வர வித்வான் ஸ்ரீ டி. பி. சுப்பிரமணியம் பிள்ளை அவர்களின் குமாரன் சங்கீத வித்வான் ஸ்ரீ செல்வரத்தினத்துக்கும் பந்தநல்லூர் ஸ்ரீ மகாலிங்கம் பிள்ளை அவர்களின் மருமகள் செல்வி தேவநாயகிக்கும் மார்ச்சு மாதம் 31உ மாயூரத்தில் மணமகன் இல்லத்தில் சிறப்பாகத் திருமணம் நடந்தேறியது.

திருமணத்தின் போது சங்கீத வித்வான்களும் சினிமா நட்சத்திரங்களும் மற்றும் பல பிரமுகர்களும் நண்பர்களும் திரளாக விஜயம் செய்து மணமக்களை ஆசீர்வதித்துச் சிறப்பித்தனர்.

அன்று இசையரசு எம். எம். தண்டபாணி தேசிகர், கானசரஸ்வதி டி. கே. பட்டம்மாள் முதலியவர்களின் இன்னிசைக் கச்சேரிகளும், நாதஸ்வரச் சக்கரவர்த்தி ஸ்ரீ டி. என். ராஜரத்தினம் பிள்ளை அவர்களின் நாதஸ்வரக் கச்சேரியும் நடந்தது. தம்பதிகளுக்கு ஏராளமான வாழ்த்துச் செய்திகள் வந்து குவிந்தன. வாழ்க செல்வரத்தினம்—தேவநாயகி.

# இந்திய அரசாங்கத்தின் திடீர் விழிப்பு!

கொழும்பு, ஏப்ரீ 10உ.

கும்பகர்ணனோடு போட்டியிட்டுக் கொண்டு அயர்ந்து தூங்கி விட்டுக் கழுத்துக்குக் கத்தி வந்த பிறகு கண் விழித்துக் கொண்டு பதறுவதைப் போல இலங்கை இந்தியர்களின் பேராபத்தான நிலைமையில் இந்திய அரசாங்கம் இப்பொழுதுதான் திடீரென்று கண் விழித்துக் கொண்டிருக்கிறது. அவர்கள் சரியாகத் தூக்கம் கலைந்து எழுந்திருப்பதற்குள் கழுத்துக்கு வந்த கத்தி அதன் காரியத்தையும் செய்து முடித்து விட்டது.

“இலங்கையில் அடுத்த மாதம் நடை பெறப் போகும் தேர்தலில் இந்தியர்களின் நிலைமை என்ன! அவர்களுக்கு ஓட்டுரிமை யிருக்குமா! அடுத்த பார்லிமெண்டுக்கு இந்தியப் பிரதிநிதிகள் முன் போல் தெரிவு செய்யப்படுவது சாத்தியமா!” என்று இந்திய மத்திய அரசாங்கம் இங்குள்ள இந்திய ஹை கமிஷனரைக் கேட்டிருக்கிறது.

இலங்கைப் பிரஜைகளுக்கு மட்டும்தான் ஓட்டுரிமை யுண்டு என்று சட்டமியற்றியதும், அதைக் கொண்ட ஓட்டர் ஜாபிதாவில் இருந்த இந்தியப் பெயர்களையெல்லாம் நீக்கியதும் இந்திய அரசாங்கத்துக்கு நன்கு தெரிந்திருக்க வேண்டும். இவ்வாறு பெயர் நீக்கப்பட்ட லட்சக்கணக்கான இந்தியர்களின் ஒருவரான ஸ்ரீ கே. ஜி. எஸ். நாயர் தொடர்ந்த வழக்கு இப்பொழுது பிரிவி கவுன்ஸிலுக்குப் போயிருப்பதையும் இந்திய சர்க்கார் வெளி நாட்டிலாகா அறியாமலிருக்க முடியாது. ஒன்பது லட்சம் இந்தியர்களும் ஓட்டுரிமையில்லாத அரசியல் அனாதைகளாக்கப்பட்டு விட்டார்களென்று இங்குள்ள இந்திய ஹை கமிஷனராலயம் அறிக்கைக்கு மேல் அறிக்கைகளை டில்லிக்கு அனுப்பி யிருப்பதோடு இந்தியப் பத்திரிகைகளிலும் பத்தி பத்தியாகப் பல சந்தர்ப்பங்களிலே செய்திகள் பிரசுரமாகி யிருக்கின்றன. இவ்வளவையும் பார்த்துக் கொண்டு இந்திய அரசாங்கம் கும்பகர்ணனைப் போலத் தூங்கி வழிந்துவிட்டு இங்கு பொதுத் தேர்தல் நடக்கப் போகிறதென்றவுடன் அதில் இந்தியர்களுக்கு ஓட்டுரிமை யிருக்குமா என்று சிரத்தையோடு விசாரித்திருப்பது விடிய விடிய ராமாயணம் கேட்டுவிட்டு ராமனுக்கும் சீதைக்கும் என்ன உறவு என்று கேட்பதைப் போலிருக்கிறது. இந்திய சர்க்கார் வெளி நாட்டிலாகாவின் இத்தகைய அசமந்தப் போக்கில் இலங்கை இந்தியர்கள் மிகவும் மனக் கொதிப் படைந்திருக்கிறார்கள்.

## பிரதமருக்கு ஆட்சேபணைத் தந்தி

இவ்வாரம் இலங்கை இந்தியக் காங்கிரஸ் காரியக் கமிட்டி ஒருநாள் முழுவதும் கூடிப் பேசி விட்டுப் பிரதம மந்திரி ஸ்ரீ டட்லி சேனநாயகாவிற்கு ஒரு கடுமையான ஆட்சேபணைத் தந்தியை அனுப்பியிருக்கிறது. கவர்னர் ஜெனரலின் பிரகடனத்தின்படி பார்லிமெண்ட் சபை கலைவதற்கு முதல் நாள் இரவு இந்தத் தந்தி பிரதம மந்திரிக்கு அனுப்பப்பட்டிருக்கிறது. ஒன்பது லட்சம் இந்தியர்களுடைய ஓட்டுரிமையைப் பறித்துப் பொதுத் தேர்தல் நடத்துவது உலகில் வேறு எங்கும் நடவாத அக்கிரமமென்றும். ஜனநாயகத்துக்கே இது முரண்பட்டதென்றும் முந்திய தேர்தலில் ஓட்டுரிமை யிருந்த இந்தியர்களுக்கெல்லாம் அடுத்து வரும் தேர்தலில் ஓட்டுரிமை யிருக்குமாறு கவனித்துக் கொள்ள வேண்டுமென்றும் காங்கிரஸ் காரியக் கமிட்டி தனது தந்தியில் பிரதம மந்திரியைக் கேட்டுக் கொண்டிருக்கிறது.

ஆனால் பார்லிமெண்டு சபை கலைந்து அடுத்த பொதுத் தேர்தலுக்கும் நாள் குறிப்பிட்ட பிறகு பிரதம மந்திரி இனி என்ன செய்ய முடியும்! இந்தியர்களின் பெயர்களை நீக்கிய 1950 ம் வருடத்திய ஓட்டர் ஜாபிதாவைக் கொண்டு தேர்தலை நடத்த முந்திய பிரதமர் ஸ்ரீ டி. எஸ். சேனநாயகா பார்லிமெண்டில் ஒரு சட்டம் இயற்றினார். அதன்படி 1950-ம் வருட ஓட்டர் ஜாபிதா அத்தாட்சி செய்யப்பட்டது. இலங்கை தேர்தல் சட்டத்தின்படி கடைசியாக அத்தாட்சி செய்த ஓட்டர் ஜாபிதாவைக் கொண்டே தேர்தல் நடத்தியாக வேண்டும். பார்லிமெண்டு சபையும் இப்பொழுது கலைந்து விட்டபடியினால் புதிய பிரதமர் விரும்பினால் கூட மேற்படி சட்டத்தை இனி அவர் திருத்தவோ அல்லது இந்தியர் பெயர்களுடைய 1949-ம் வருடத்திய ஓட்டர் ஜாபிதா அடிப்படையில் தேர்தல் நடத்துமாறு உத்தரவிடவோ இரண்டும் சாத்தியமில்லை. பார்லிமெண்டு சபை கலைந்து தேர்தல் சட்டத்தைத் திருத்துவதற்கும் வழியில்லாமலிருக்கையில் காலஞ் சென்ற பிரதமர் திட்டமிட்டபடி, இந்தியர்களுக்கு ஓட்டுரிமையில்லாமல் தேர்தலை நடத்தி முடிப்பதைத் தவிர வேறு போக்கே கிடையாது. இனி யார் என்ன ஆட்சேபணை செய்தாலும், இந்திய அரசாங்கம் அக்கறை காட்டினாலும் பயனில்லை.

## காங்கிரசுக்கே ஆபத்து

இந்த அபாயகரமான தருணத்தில் இந்தியர்களுக்கிடையே கட்டுப்பாடும் ஒற்றுமையும் ஓங்கியிருக்கவேண்டிய தருணத்தில் அவர்களுக்குள்ளேயே கட்சிப் பிரதி கட்சிகளும் தலைமைப் பதவிக்குப் போட்டா போட்டிகளும் ஏற்பட்டுச் சீரழிந்து போவது மிகவும் விசனிக்கத் தக்கது. போட்டியைத் தவிர்க்கவும், ஒற்றுமையை நிலை நிறுத்தவும் பகீரதப் பிரயத்தனங்கள் நடந்தும், இந்த நிமிடம் வரை ஒற்றுமைக்கான அறிகுறிகளைச் சிறிதுகூடக் காணோம். —ஜனி.

# இன்றே ஆரம்பியுங்கள்.....



கூந்தலின் வளர்ச்சிக்குக் குழந்தைப் பருவத்திலிருந்தே போஷாக்கு அவசியம்.

உங்கள் பெண்ணும் நீண்ட பளபளப்பான அழகிய கூந்தலுடன் விளங்க வேண்டுமானால் இப்பொழுதிலிருந்தே ஸ்வஸ்திக் வாஸனை கேஸ்டர் ஆயில் உபயோகியுங்கள்.

**ஸ்வஸ்திக்**

## வாஸனை கேஸ்டர் ஆயில்




### கூந்தல் அழகிற்கும், முக மலர்ச்சிக்கும்

ஸ்வஸ்திக் ஆயில் மில்ஸ் லிமிடெட், வடாலா, பம்பாய்

# அந்த வயிற்று வலியை இப்போதே குணப்படுத்திக் கொள்ளுங்கள்!

**அலக்ஷியப்படுத்தப் பட்ட அஜீரணம் ஆபத்தை உண்டாக்கும்.**

உங்களுக்கும் பிடித்ததைச் சாப்பிட முடியாதபடி அஜீரணம் உங்களுக்கு ஏற்படுகிறது என்றால் நீங்கள் பாதி உயிருடன்தான் வாழுகிறீர்கள் என்று அர்த்தம். மக்ளீன் பிராண்ட் ஸ்டமக் பவுடர் உங்களுக்கு உதவியளிக்குமாக; அது உலகம் முழுவதிலுமுள்ள ஆயிரக்கணக்கான மக்களுக்கு உதவியளித்திருக்கிறது.

அஜீரணத்தினால் உண்டாகும் நோவை வினாடிகளுக்குள்ளாகவே ஓர் டோஸ் மருந்து குணப்படுத்தும். அஜீரணத்துக்குள்ளான தேக நிலையைச் சரிப்படுத்தி உதவுவதற்கு மருந்து ஒரு தவணைக்கு உட்கொள்ள வேண்டும். அலக்ஷியப்படுத்தப்பட்ட அஜீரணம் ஆபத்தானது; ஞாபகமிருக்கட்டும். இன்றைய அசௌகரியம் நாளைய நோயாகலாம் இறுதியில் ஆபத்தானதும் குணப்படுத்த இயலாததுமான தேக நிலை உண்டாக்கிவிடும். மக்ளீன் பிராண்ட் ஸ்டமக் பவுடரிடம் நம்பிக்கை வைத்து உட்கொண்டு ருசிகரமான பண்டங்களை மீண்டும் சாப்பிட்டு மகிழுங்கள். உங்களுக்கு இஷ்டமானபடி விருப்பமானதைச் சாப்பிடலாம். அப்போதுதான் வாழ்க்கை வாழக் கூடியதாக இருக்கும்.







ஞாபகமிருக்கட்டும். மக்ளீன் பிராண்ட் ஸ்டமக் பவுடர் உலகப்பிரசித்தி பெற்றது. எனவே அநேகம் பேர் அதைக் காப்பியடிக்கப் பார்க்கிறார்கள். "அலெக்ஸ் ஸி. மக்ளீன்" என்கிற கையொப்பம் இருக்கிறதா என்று பார்த்து உண்மையான சரக்கையே வாங்குங்கள்.

# மக்ளீன் பிராண்ட் ஸ்டமக் பவுடர்

வியாபார விவரங்களுக்கு :

ஜே. எல். மாரிஸன், ஸன் & ஜோன்ஸ் (இந்தியா) லிமிடெட்

தபால் பெட்டி 6527, பம்பாய் 26 ; தபால் பெட்டி 387, கல்கத்தா

தபால் பெட்டி 1370, மதராஸ்



# கம்பர் தரும் காட்சி

டி. கே. சி

## 319. வருக தேர் விரைவில்!

எத்தனையோ வீரர்கள் மடிந்தபோதிலும் இந்திரஜித்து ஒருவன்தான் கடைசி வரை யுத்தம் செய்து வெற்றியைத் தரக்கூடும் என்ற ஒரு நம்பிக்கையிருந்தது ராவணனுக்கு.

இந்திரஜித்துக்கும் ஒருநாள் லக்ஷ்மணனோடு யுத்தம் செய்ததில் போதும் போதும் என்றாய் விட்டது. ஏதோ மாய வித்தைகள் செய்து எதிரிகளைக் கொன்று விடலாம் என்று பார்த்தான். அதுவும் பலிக்கவில்லை.

எதிரிகளைச் சமாதானப் படுத்தினால்தான் ராவணன் காரியமும் அரக்கர் காரியமும் ஒப்பேறும் என்று எண்ணி மிக்க துணிவோடு தானே சீதையை விட்டு விடும்படி ராவணனிடம் சொல்லிப் பார்த்தான்.

ஆனால் ராவணனுக்குக் கோபம்தான் வந்தது. அதோடு வீராவேசமும் கலந்து கொண்டது.

"விடுவதற்கு உடைமை, உடல், உயிர் எல்லாம் இருக்கின்றன. சீதையை விட்டு விடுகிற காரியம் கிடையாது" என்று கூறினான் ராவணன்.

மேலும், "சீதையை விட்டுவிட்டால் என்ன நேரும் என்பது உனக்குத் தெரியவில்லை. சிறு பிள்ளை நீ" என்றான்.

விட்டனன் சீதைதன் னை
    யென்னனும், விண்ணோர் நண் ணிக்
கட்டுவ(து) அல்லால்பின் னை
    யானெனக் கருதுவா ரோ :
பட்டனன் என்றபோ தும்
    எளிமையில் படுகிலேன் யான்,
எட்டினோ(டு) இரண்டும் ஆய
    திசைகளை எறிந்துவென் றேன் :

[விட்டனன் சீதை தன்னை என்னனும்: சீதையை விட்டு விட்டான் ராவணன் என்ற செய்தி தெரிய வேண்டியதுதான் பாக்கி — உடனே; விண்ணோர் நண்ணிக் கட்டுவதல்லால்: அபாரமான சக்தி படைத்த தேவர்கள் தான் என்று சொல்லக் கூடிய பகை அரசர்கள் யாதொரு பயமும் இல்லாமல் வந்து என்னைக் கட்டிச் சிறையில் அல்லவா வைத்து விடுவார்கள்? ராவணன் என்றும் என்னைக் கருதுவார்களோ?; பட்டனன் என்ற போதும் எளிமையிற் படுகிலேன் யான்: உயிரை விட்ட போதும் சாமான்யமாய் விட்டேன் என்ற கணக்கில் வரக் கூடாது; எட்டினோடு இரண்டும் ஆய திசைகளை எறிந்து வென்றேன்: எட்டுத் திசையென்ன வானமென்ன பாதாளம் என்ன எங்கெங்கிருந்தாலும் பகைவர், அவர்களைத் தாக்கி வெற்றி கொண்டவன் ஆகிய நான்—எளிமையிற் படுகிலேன்.]

குறிப்பு:—அபூர்வமான பாவ உருவம் படைத்த செய்யுள்.

∴

கோபம் வந்தது; வீராவேசம் வந்தது. அடுத்தாற் போல் இகழ்ச்சி பிறக்கிறது இந்திரஜித்தின் மீது.

"உன்னிடத்தில் என்னத்தைச் சொல்லி என்ன செய்ய! போதும், போதும்! மெள்ள உன் ஜாகைக்கு இப்படியே போ. தோளில் ஏதேனும் அம்பு தைத்திருந்தால் அதையும் மெள்ள வெளியே எடுத்துக் கொள். வாஸ்தவந்தான்! யுத்தத்தில் ரொம்ப ரொம்ப சிரமப் பட்டு விட்டாய்! சிரமத்தை நீக்கிக் கொள்."

சொல்லினன் பல்வும்; நீ நின்
இருக்கையைத் தொடர்ந்து,தோ ளிற்
புல்லியபகழி வாங்கிப் போர்த்
தொழிற் சிரமம்போக் கி
எல்லியுங் கழித்தியென் று
எழுந்தனன்; எழுந்து,பேழ் வாய்
வல்லியம் முனிந்தாலன் றான்—
"வருகதேர் விரைவின்" என் றான்.

[எல்லியும் கழித்தி யென்று: 'பாக்கியுள்ள இராக் காலத்தையும் சௌகரியமாய்க் கழித்துக் கொள்' என்று உதறிப் பேசிவிட்டு; எழுந்தனன்: எழுந்து: பேழ்வாய் வல்லியம் முனிந்தால் அன்னான்: எழுந்து நின்றவனும், பயங்கரமாய் விரிந்த வாயுடன் புலி கோபாவேசங் கொண்டு நின்றது போன்ற ராவணன்—வேறொன்றும் பேசாதவனாய்; வருகதேர் விரைவின் என்றான்.]

குறிப்பு:—இகழ்ச்சி பாவத்துக்கு ஒரு புதிய வேகம் கொடுக்கிறது. "வருகதேர் விரைவின்" என்ற வார்த்தைகள் தனித்துத் துண்டாய் நிற்பது.

⁂

அப்படி எழுந்த ராவணனை நோக்கி இந்திரஜித்தானவன் "கோபம் வேண்டாம், அப்பா! நானே போய் அந்த நரர்களை வென்று வருகிறேன்" என்று உறுதி கூறி நடந்து சென்றான். அப்படி நடந்து போகும்போது தந்தைமேலுள்ள பாசம், பரிவு, காரணமாகக் கடைக் கண்ணால் நோக்கி விட்டு நடக்கிறான். கண்களில் கண்ணீர் பெருகிச் சொட்டுச் சொட்டாக உதிர்கிறது, வீராதி வீரனான இந்திரஜித்துக்கு.

வீரம், பாசம், இரக்கம் எல்லாம் நமது கண்முன் வருகின்றன.

# படித்துப் பாருங்கள்!

## நான் கண்ட ஜப்பான்

எரிமலைக் கொதிப்பு, நில நடுக்கம் இவற்றுக்கு இடையில் ஜப்பான் தேசம், தொழில் வளத்திலும் வர்த்தகத் துறையிலும் சிறந்து விளங்குகிறது. ஜப்பான் என்னும் பெயருக்கு அந்நாட்டு மக்கள் என்ன பொருள் கூறினாலும், பிறநாட்டு மக்கள் அந்தப் பெயருக்குத் 'தொழில் திறமை' என்று தான் பொருள் கொள்ளுகின்றனர். அது முற்றிலும் பொருத்தமான பொருள்தான். உலகத்தில் மற்ற நாடுகளில் உற்பத்தியாகும் எல்லாவிதப் பொருள்களும் ஜப்பான் தேசத்தில் உற்பத்தியாகின்றன. சின்னக் குண்டூசி முதல் பெரிய போர்க் கப்பல்கள் வரையில் ஜப்பானியர் மிகத் திறமையோடு செய்கின்றனர்.

இத்தகைய இணையற்ற நாட்டுக்குப் போய்ச் சுற்றுப் பிரயாணம் செய்து வந்த ஸ்ரீ எஸ். ராமசுவாமி நாயுடு அவர்கள் அந்நாட்டைப் பற்றிச் சுவாரஸ்யமாக இந்நூலில் கூறுகிறார்.

நம் நாட்டில் நவராத்திரிப் பண்டிகையின் போது பெண்மணிகள் பொம்மைக் கொலு வைப்பதுபோல் ஜப்பானிலும் பொம்மைக் கொலு வைக்கும் வழக்கம் உண்டு. சிறுமியர் மட்டும் அல்லாமல் சிறுவர்களும் அந்தக் கொலுவில் கலந்து கொள்வார்களாம். சிறுமியர் வைக்கும் கொலுவில் சாதாரணப் பதுமைகள் வைக்கப்பட்டிருக்கும். சிறுவர்கள் கொலுவில், போர்வீரர்கள், வாள், ஈட்டி, குதிரை முதலியவைகள் நிறைந்து வீரத்தை விளக்குவனவாயிருக்கும் என்பதை இந்நூலில் படிக்கும்போது ஜப்பானியரின் வீர உணர்ச்சியைப் பாராட்டவே தோன்றுகிறது.

ஜப்பானியர் ரயில், டிராம், பஸ் இவற்றில் பிரயாணம் செய்தால் டிக்கெட்டு வாங்காமல் இருக்க மாட்டார்களாம். தாங்கள் போக வேண்டிய இடத்தை அடைந்ததும் டிக்கெட்டைக் கண்ட இடத்தில் போடாமல் அவற்றுக்கென அங்கு வைக்கப் பட்டிருக்கும் பெட்டிகளிலேயே போடுவார்களாம். ஓர் இடத்தில் எத்தனை பெண்கள் இருந்தாலும், குழந்தைகள் இருந்தாலும் கூச்சல் என்பதே இராதாம். எல்லோரும் அமைதியாக இருப்பார்களாம்.

ஜப்பானில் சோம்பித் திரிபவரே கிடையாது. உழைப்பை உயர்வாகக் கொண்டவர்கள் ஜப்பானியர். இவற்றை யெல்லாம் ஆசிரியர் விரிவாக எழுதியிருக்கிறார். இந் நூலைப் படித்ததும் நாமே ஜப்பானுக்குப் போய் வந்தது போன்ற உணர்ச்சி உண்டாகி, "நாம் கண்ட ஜப்பான்" என்று இந் நூலின் பெயரை மாற்றிச் சொல்லத் தோன்றுகிறது.

பிரசுரம்: வெள்ளையன் பதிப்புக் கழகம், கண்டனூர், ராமநாதபுரம் மாவட்டம்; விலை: ரூ. 2

## கம்பர் தமிழ் அகராதி

ஆங்கில மொழியில் எண்ணிறந்த நூல்கள் இருப்பது போலவே, அகராதிகளும் பல இருக்கின்றன. தமிழில் பழைய பேரகராதி ஒன்று தொன்று தொட்டு இருந்து வருகிறது. ஆயினும் மாணவ மாணவிகளுக் கெல்லாம் பயன்படும் விதத்தில் சிறிய அளவில் ஓர் அகராதி வேண்டியதுதான். அந்தத் தேவையைப் பூர்த்தி செய்கிறது இந்த அகராதி. நல்ல காகிதத்தில் அழகாக அச்சிடப்பட்டிருக்கிறது. கடைசியில் அநுபந்தம் என்ற பகுதியில் வழக்கிலுள்ள பல வடமொழிப் பதங்களுக்குப் பொருள் தரப்பட்டிருக்கிறது.

தொகுத்தவர்:—பண்டித வே. ராமச்சந்திர சர்மா; பிரசுரம்: B. S. & F. Mart. 113, Armenian St. Madras-1. விலை: ரூ. 7—12—0.

# காஞ்சனை







"லக்ஷ்மி"
எழுதிய இந்தக்கதையை
ஏற்கனவே பல லக்ஷக்-
கணக்கான வாசகர்கள்
**ஆனந்த விகடனில்**
வாசித்து மகிழ்ந்ததற்கிணங்க
இப்போது பொருத்தமான
நடிக நக்ஷத்திரங்களுடன்
திரைப்படமாகத் தயாரிக்கப்
பெற்றுள்ளது...

டைரக்ஷன்:
**எஸ்.எம். ஸ்ரீராமுலு நாயுடு**
**பக்ஷிராஜா ஸ்டுடியோஸ்**
தயாரிப்பு...






**விரைவில் வெளிவருகிறது**

# அஞ்சலையின் கனவு

கி. ரங்கராஜன்

அன்று திருச்சி ரயில்வே ஜங்ஷனில் வழக்கத்தை விடக் கூட்டம் அதிகமாக இருந்தது. பிரயாணிகளின் கூச்சலும், குழந்தைகளின் அலறலும் காதைத் துளைத்தன.

இரவு எட்டு மணி இருக்கும். ஜனங்களோடு சம்பந்தப்படாமல், எங்கோ ஒரு மூலையில் உட்கார்ந்தபடி போவோர் வருவோரைக் கவனித்துக் கொண்டிருந்தான் செல்லமுத்து. திருச்சி கிரிமினல் ஜயிலிலிருந்து, முதல் நாள் காலையில் விடுதலை அடைந்த அவன், தன் சொந்த ஊரான கும்பகோணத்துக்குப் போக நினைத்து ரயிலடியில் வந்து உட்கார்ந்திருந்தான். நாலரை வருஷமாகப் பார்க்காத அந்த ஜன சமுத்திரத்தை அன்று அவன் பார்த்தபோது அவனுக்கே ஆச்சரியமாக இருந்தது. ஒவ்வொரு பிரயாணியாகக் கூர்ந்து கூர்ந்து பார்த்துக் கொண்டிருந்தான். தனக்குத் தெரிந்தவர்கள் யாராவது அங்கு வருகிறார்களா என்று பார்த்தான். எல்லாருடைய முகமும் புது முகமாக இருந்தது. இவ்வளவு பெரிய ஸ்டேஷனில் யாராகிலும் ஒருவர் கூடவா தனக்குத் தெரிந்தவராய் இல்லை என்று நினைத்து வியந்தான்.

அவன் வியப்பு அதிக நேரம் நீடிக்கவில்லை. ஒருவர் போஜன சாலையிலிருந்து வேகமாக வெளியே கிளம்புவதைப் பார்த்தான். "அட, நம்ம நாகநாத செட்டியார் அல்ல!" என்று மனத்துக்குள் சொல்லிக் கொண்டான். கும்பகோணம் போகிறாரோ அல்லது அங்கிருந்து வருகிறாரோ தெரியவில்லையே என்று நினைத்தவனாய், அவரையும் அவர் குடும்பத்தையும் தொடர்ந்தான்.

சிறிது தூரம் அவர்களுடன் போனதும், விஷயம் ஒருவாறு விளங்கிற்று. ஈரோடு வண்டி நிற்கும் பிளாட்பாரத்துக்குள் அவர்கள் புகுந்தார்கள். அவர்களை மேலும் பின்தொடராமல் திரும்பினான்.

"தஞ்சாவூர், மாயூரம் வழியாகச் சென்னை எழும்பூர் செல்லும் இந்தோ ஸிலோன் எக்ஸ்பிரஸ் மூன்றாவது பிளாட்பாரத்துக்குள் வந்து கொண்டிருக்கிறது" என்ற அறிவிப்பு காதில் தாக்கினதும், செல்லமுத்து வேகமாக மூன்றாவது பிளாட்பாரத்தை அணுகினான். ரயில் நின்றதும் கடைசிப் பெட்டிக்குள் ஏறினான்.

கும்பகோணத்தில் தனக்கு அப்பொழுது தெரிந்தவர்கள் ஒவ்வொருவரையும், அவர் வீட்டையும் நினைவு படுத்திக் கொண்டான், செல்லமுத்து. பெரிய தெரு அவன் மனத்தில் காட்சி அளித்தது. ஜங்ஷனில் பார்த்த செட்டியார் வீடு, தெருவின் நடு மையத்தில் இருக்கிறது. மாடிக் கைப்பிடிச் சுவர் வழியாக 'ஈஸி'யாக உள்ளே போகலாம்.

மூன்றாவது கட்டில் முன்னே ஒரு கிழவி குடியிருந்தாள். அவள்தான் இப்பொழுதும் காவலுக்காக இருப்பாள். முன்பு பார்த்த போதே அவளுக்கு ரொம்ப வயசு. இப்பொழுது இன்னும் அதிகமாயிருக்கும். உயிருடன் இருக்கிறாளோ இல்லையோ என்றெல்லாம் நினைத்தான்.

இரவு பதினொன்றரை மணிக்கு ரயில் கும்பகோணம் வந்தது. நல்ல நிசி. கடுமையான இருட்டு. ஸ்டேஷனில் அதிக நடமாட்டம் இல்லை. டிக்கட்டைக் கொடுத்து விட்டு வேகமாக வெளியே நடந்தான்.

பெரிய தெரு எல்லையை மிதித்தபோது மணிக்கூண்டில் பன்னிரண்டு மணி அடித்தது. இரண்டாவது சினிமா முடிவதற்குள் ஏதாவது தோது பண்ணிக்கொண்டு வீட்டுக்குப் போய்விட வேண்டும் என்று நினைத்தான். நாலரை வருஷமாகப் பார்க்காத அஞ்சலையைப் பார்க்கப் போகும்போது வெறுங் கையோடு போவது அவனுக்குப் பிடிக்கவில்லை. ஒவ்வொரு வீடாகப் பார்த்துக்



கணவன் :—நீ தூரப் போய் உட்கார்ந்திருக்கும் போதே உனக்கு முந்நூறு ரூபாயில் ஒரு புடவை வேண்டும் என்பது உன் முகத்தில் எழுதி ஒட்டியிருப்பதை என்னால் நன்றாய்ப் படிக்க முடிகிறதே......!

மனைவி :—பேஷ், பேஷ்! ரொம்ப சரி. இன்னும், மேலே படியுங்கள்!

கொண்டே போனான். சில வீடுகள் அவனுக்கு அடையாளமே தெரியவில்லை. முன்பு பார்த்தபோது சின்ன வீடுகளா யிருந்தவையெல்லாம் இப்பொழுது அந்த நிலை மாறி மாடி வீடுகளாகி விட்டன.

செட்டியார் வீடும் அம்மாதிரி ஏதாவது மாறுதலுக்கு 'உட்பட்டு இருக்குமோ என்று பயந்தவனாய் அந்தவீட்டின் வாசலை அடைந்தான். ஆனால் அவன் பயந்தபடி அந்த வீடு ஒரு மாறுதலும் பெறவில்லை. பெரிய தெருவில் ஒவ்வொரு வீட்டின் 'பிளா'னும் அவன் மனத்தில் இருக்கும் போது, அந்த வீட்டுக்குள் நுழைவது அவனுக்கு ஒரு பிரமாதமாகத் தோன்றவில்லை.

கால் நாழிகையில் மாடிக்குள் புகுந்து விட்டான் செல்லமுத்து. மாடியில் நாலைந்து பீரோக்கள் இருந்தன. இரண்டு மூன்று சோபாக்கள், கட்டில்கள் எல்லாம் இருந்தன. சுவர் ஓரமாய் ஒரு பெரிய இரும்புப் பெட்டி, "வா, வா" என்று செல்லமுத்துவை அழைத்தது.

செட்டியார் நல்ல பணக்காரர். அம்மாள் அவரை,விடப் பணக்காரி. சின்ன சாமானைக் கையடக்கமாக ஏதாவது ஒன்றைத் தட்டிக் கொண்டு போய்விட நினைத்தவனாய், மடியில் தயாராக வைத்திருந்த குடைக் கம்பியை எடுத்தான்.' குடைக் கம்பி அவனுடைய பாசுபதாஸ்திரம். அந்த அஸ்திரத்துக்கு முன் எந்த இரும்புப் பெட்டியும் தலைவணங்கித் தான் ஆகவேண்டும்.

ஆயிற்று; அரை நொடியில் பூட்டு திறந்து கொள்ளும் என்ற சமயத்தில் வாசல் கதவு திறக்கும் சப்தம் கேட்டது. மேலே இருந்து குனிந்து பார்த்தான். என்ன ஆச்சரியம்! யார் அது? அஞ்சலையா? அஞ்சலை அங்கு எதற்கு வந்தாள்? என்ற கேள்விகள் அவன் மனத்தில் எழுந்தன. எதற்கு வந்திருக்கப் போகிறாள்? அவள் திருடன் மனைவிதானே! தன்னுடைய குணமும் அவளுக்கும் படியத்தானே செய்யும்! அன்று அவன் ஜட்ஜ் கோர்ட்டில் தீர்ப்பு சொன்ன போது அப்படி அழுதாளே! அந்த அழுகை வெறும் வேஷம் தானா? எது எப்படி ஆனாலும் இப்பொழுது அவள் கண்ணில் படக்கூடாது என்று நினைத்தவனாய், வந்த வழியே திரும்பி விட்டான்.

காந்தி பார்க்கில் துண்டை விரித்துப் படுத்தான் செல்லமுத்து. அவனுக்கு அந்த இரவு சிவராத்திரியாக இருந்தது. பலபல எண்ணங்கள் அவன் மனத்தில் தோன்றி வதைத்தன. அஞ்சலை அப்படியும் ஆகிவிடுவாளா என்று அதிசயித்தான்! விடியற்காலம் நாலு மணிக்குக் கண்ணயர்ந்தான். பொழுது நன்றாக விடிந்து, எட்டு மணி ஆகுமட்டும் தூங்கினான்.

பிறகு பரபரப்புடன் எழுந்து வேகமாக வீட்டுக்குப் போனான். அஞ்சலை அடுக்களையில் ஆப்பம் வார்த்துக் கொண்டிருந்தாள்.

"என்ன குட்டி, சுகந்தானே?" என்று கேட்டுக் கொண்டே உள்ளே நுழைந்தான்.

"யாரது?" என்று சொல்லிக் கொண்டே திரும்பினாள். ஒட்டி உலர்ந்த உடம்புடன், தாடியும் மீசையுமாகச் செல்லமுத்து நிற்பதைக் கண்டவுடன் அவள், "ஆ, நீயா மச்சான்! எப்ப வந்தே? வா, குந்து!" என்று வரவேற்றவளாய் "நல்ல படியா வந்தியே.





கும்பகோணத்தில் அன்னை கஸ்தூரி பாயின் புனிதமான பெயருடன் சுமார் மூன்று வருட காலமாகக் கஸ்தூரிபாய் மாதர் சங்கம் நடந்து வருகிறது. இச் சங்கத்தைச் சேர்ந்த பெண்மணிகள் காந்தி மகாத்மாவுக்குப் பிரியமான நிர்மாண வேலைகளில் ஈடுபட்டு அருமையாக வேலை செய்து வருகிறார்கள். சென்ற மார்ச்சு மாதம் 30-ம் தேதியன்று சங்கத்தின் ஆண்டு விழா "கல்கி" ஆசிரியர் தலைமையில் சிறப்பாக நடைபெற்றது. ஸ்ரீ பாஸ்கரத் தொண்டைமான் மேற்படி மாதர் சங்கத்தின் ஆதரவில் நடந்த பாடல் போட்டியில் பரிசு பெற்ற குழந்தைகளுக்குப் பரிசுகளை வழங்கினார். சங்கத்தை நிர்வகித்துத் தொண்டு செய்யும் சகோதரிகளில் முக்கியமானவர்கள் சிலரை இப் படத்தில் காணலாம்.

---

இந்தா, சூடாக ஆப்பம் வார்த்திருக்கேன்'' என்று பீங்கான் தட்டை எடுத்து அதில் இரண்டு ஆப்பத்தைப் போட்டாள்.

பசி வேகத்தில் அந்த ஆப்பம் அமிர்தமாக இருந்தது செல்லமுத்துவுக்கு. ஆப்பத்தைத் தின்றுகொண்டே, "ஆமாம், இந்த நாலு வருஷமா என்ன செய்துகிட்டிருக்கே? எப்படி குடும்பம் நடக்குது?'' என்று கேட்டான்.

உடனே அஞ்சலைக்கு அழுகை வந்து விட்டது. அழுதுகொண்டே, "வெண்ணெய் திரளும் போது'ன்னு என்னமோ சொல்லு வாங்களே அது கணக்கா அல்ல ஆயிடிச்சு? நீ கம்பிக்குள்ளற போனதும், பாரு, எனக்கு நாலு வீடு திகைஞ்சிச்சு. பெரிய தெருவிலே நம்ம நாகநாத செட்டியார் வீட்டிலே மூணு மாசமா வேலை செய்து கிட்டிருக்கேன். செட்டியார் ரொம்ப நல்லவங்க. அவுங்க சம்சாரம் அதுக்கு மேலே. அவுங்க கிட்டே நம்ம குடும்பத்தைப் பற்றிச் சொல்லி அழு தேன். 'அஞ்சலை, நீ கவலைப்படாதே, உன் புருசனுக்கு நல்ல வேலை போட்டுத் தரேன்' என்றார்கள்'' என்று சொன்னாள்.

"நானே போய் அவுங்களைப் பார்க்கலாமா?'' என்றான் செல்லமுத்து.

"அவுங்க குடும்பத்தோடே சேலத்துக்கு அந்தாண்டே, ஒரு ஊருக்குப் போயிருக் காங்க. அவுங்க சொந்தக்காரங்க வீட்டிலே கல்யாணமாம். வர்ரத்துக்கு நாலஞ்சு நாளா கும். அவுங்க வந்த உடனே நானே சொல்லி ஏதாவது தோது பண்றேன். அவுங்க போரப்ப வீட்டுச் சாவியை என்னண்டை கொடுத்து வர்ரவரைக்கும் ராத்திரியிலே நம்ம வீட்டிலேயே படுத்துக்கிட என்று சொன்னாங்க. நான்தான் கூறு கெட்டுப் போய், அவுங்க செஞ்ச நன்றியை மறந்து நேத்து வரைக்கும் போகாமே இருந்துவிட் டேன். நேத்து ராவுலே தூங்கறப்ப ஒரு கனாக் கண்டேன். யாரோ ஒரு திருடன் அவுங்க வீட்டுக்குள்ளறப் புகுந்து களவாடிக்கிட்டி ருக்காப்பிலே கனாக் கண்டேன். திடீர்னு முழிச்சிக்கிட்டு ஓட்டமா ஓடினேன் அவுங்க வீட்டுக்கு. நல்லவேளை திருடனும் இல்லை. ஒன்றுமில்லை. எல்லாம் வைச்சது வைச்ச படியே இருந்தது. நானும் போகாமே, கனா வும் பலிச்சிருந்தா என்ன ஆகியிருக்கும்? சந்தேகம் யார் மேலே உளும்? நீ ஜெயி லிலே யிருந்து வெளியே வர்ரத்துக்கும், நான் உன்னே போரத்துக்கும் சரியா இருந்திருக்கும். நீ என்ன சொல்றே?'' என்றாள் அஞ்சலை.

செல்லமுத்து ஒன்றும் சொல்லவில்லை. நல்லவேளை. அஞ்சலை அந்த நடுநிசியில் செட்டியார் வீட்டுக்குப் போகாமல் அசட் டையாய் இருந்திருந்தால் என்ன ஆகி இருக் கும் என்று நினைத்துப் பார்த்தான். அப்படி ஒன்றும் விபரீதம் ஏற்படாமல் தன்னையும், தன் மனைவியையும் காப்பாற்றின குல தெய் வம் காளியாத்தாளுக்கு நன்றி செலுத்திய வனாய், "இன்னொரு ஆப்பம் போடு, நல்லா இருக்குது'' என்று சொன்னான் செல்லமுத்து.

# மத்திய கேந்திரம்

ஜெயமணி

## முடிவுரை

மூன்றாவது உலக மகாயுத்தம் உண்டாகுமா? அந்த மகா யுத்தம் எந்த இடத்தில் பிறிட்டு எழக் கூடும்?

இந்தக் கேள்விகளுக்கு அமெரிக்க ஜனாதிபதி ட்ருமன் அளித்துள்ள பதிலைப் பாருங்கள்:

" துருக்கிமீது படையெடுத்து, கருங்கடல் ஜலசந்தியையும் மத்திய தரைக் கடலையும் தன் ஆதிக்கத்தின் கீழ்க் கொண்டுவர ருஷ்யா உத்தேசித்திருக்கிறது. எனவே, மற்றொரு மகாயுத்தம் உருவாகி வருகிறது என்பதில் எனக்குச் சிறிதும் சந்தேகமில்லை. ருஷ்யாவின் அத்தகைய ஆதிக்க நோக்கத்தைத் தகர்க்க முடியுமா? மூன்றாவது மகாயுத்தத்தைத் தடுக்க முடியுமா? இந்தக் கேள்விகளுக்கு மற்றொரு கேள்வியின் மூலம்தான் பதில் அளிக்க முடியும். நம்மிடம் எத்தனை டிவிஷன் துருப்புகள் இருக்கின்றன? மூன்றாவது மகாயுத்தம் ஏற்படுவதும் ஏற்படாததும் இந்தக் கேள்விக்கு நாம் அளிக்கும் பதிலையே பொறுத்திருக்கிறது!"

ஜனாதிபதி ட்ருமன் இவ்வாறு கூறியிருப்பதிலிருந்து மத்திய கேந்திரப் பிரதேசத்தில் மகத்தான கொந்தளிப்பு இருந்து வருகிறது என்பதைத் தெரிந்து கொள்ளலாம்.

உலக சரித்திரத்திலே பல நூற்றாண்டுகளுக்கு முன்பிருந்து மத்திய கேந்திரப் பிரதேசங்களின் பிரதாபத்தைக் கவனிப்போர் பிரமிக்காமல் இருக்க முடியாது.

உலகத்தை ஆட்டிவைத்த சாம்ராஜ்யங்கள் பிறந்ததும் இறந்ததும் மத்திய கேந்திரப் பிரதேசத்தில்தான்.

இந்த உண்மையையும், மத்திய கேந்திர நாடுகளில் நிகழ்ந்த பல முக்கிய சம்பவங்களையும், மத்திய தரைக் கடலில் உள்ள பிரிட்டிஷ், அமெரிக்கக் கடற்படைத் தளங்களையும் இந்தப் பக்கத்தில் பிரசுரமாகியுள்ள படம் விவரமாகக் காட்டுகிறது.

உலகம் முழுதும் வியாபித்துள்ள மதங்களும் அந்த மதங்களைச் சிருஷ்டித்தவர்களும் பிறந்தது மத்திய கேந்திரத்தில்தான்.



உலக சரித்திரத்தின் போக்கை முற்றிலும் மாற்றி அமைத்த மாபெரும் வீரர்கள் மத்திய கேந்திரப் பிரதேசத்தில்தான் தங்கள் கீர்த்தியை நிலைநாட்டினர்.

உலகத்தின் வேறெந்தப் பாகத்தையும் காட்டிலும் மத்திய கேந்திர நாடுகளில்தான் மானிடவர்க்கத்தை ஆட்டிவைத்த அரசியல் போர்களும் மதப்போர்களும் நிகழ்ந்தன.

உலகத்திலே மோட்டார்கள் ஓடுவதற்கும் விமானங்கள் பறப்பதற்கும் யந்திரங்கள் இயங்குவதற்கும் இன்றியமையாத எண்ணெய்ச் செல்வத்துக்கு உலக நாடுகள் பெரிதும் மத்திய கேந்திரப் பிரதேசத்தின் தயவைத்தான் நாட வேண்டியிருக்கிறது.

அதனால்தான் மேற்படி பிரதேசம் எக்காலத்திலும் பலம் பொருந்திய நாடுகளின் போட்டிக்கும் பொறாமைக்கும் காரணமாக இருந்து வந்திருக்கிறது.

மத்திய கேந்திரப் பிரதேசத்தில் ருஷ்யாவின் ஆதிக்கம் ஏற்பட்டு விடாமல் இருப்பதற்காக முன்பு பிரிட்டிஷார் மத்திய தரைக் கடலில் தங்களுடைய கடற்படையின் பெரும் பகுதியை வைத்திருந்தார்கள்.

இப்போது அங்கு ஏராளமான அமெரிக்கக் கடற்படைகள் இருக்கின்றன. அமெரிக்க, பிரிட்டிஷ் தளபதிகளின் தலைமையில் ஐரோப்பிய நாடுகளைச் சேர்ந்த படைகள் ஐரோப்பாவிலும் மத்திய கேந்திரப் பிரதேசங்களிலும் ருஷ்யாவின் ஆதிக்கம் ஏற்படாமல் கண்காணித்து வருகின்றன.

ஏற்கெனவே பல்வேறு நாடுகளின் மீது படையெடுத்தவர்களுக்கும் மத்திய தரைக் கடலே உதவியாக இருந்திருக்கிறது.

இந்தியாவை வெற்றி கொள்ள வேண்டும் என்ற நெப்போலியனின் ஆசை, மத்திய தரைக் கடலில் அவன் அடைந்த மாபெரும் தோல்வி காரணமாக நிறைவேறவில்லை. அந்தப் போரில் வெற்றி பெற்ற பிரிட்டிஷார் இரண்டாவது உலக மகாயுத்தம் முடியும் வரையில், அதாவது சுமார் நூற்றைம்பது வருஷ காலம் ஏக போகமாக அந்தக் கடலின் எஜமானர்களாய் விளங்கினர்.

ஆனால் இப்போது அந்த சட்டாம்பிள்ளை ஸ்தானத்தை அமெரிக்கக் கடற்படை ஏற்றுக் கொண்டிருக்கிறது.

சென்ற மகா யுத்தத்தின்போது டூனீசியாவில் ஜெர்மன் துருப்புகள் சரண் அடைந்ததிலிருந்துதான் ஜெர்மனி முதலிய அச்சு நாடுகளின் தோல்வி ஆரம்பமாயிற்று.

இன்றும் மத்திய கேந்திர பிரதேசத்தில் நேர் முகமாகவோ மறை முகமாகவோ யாருடைய ஆதிக்கம் இருக்கிறதோ அவர்களால்தான் பெரும் யுத்தத்தை ஆரம்பிக்கவோ அல்லது தடுக்கவோ முடியும்.

தேசங்களின் மகத்தான வெற்றிகள், தோல்விகள், வீரர்கள் புரிந்த சாகஸங்கள், கொடியவர்களின் அட்டூழியங்கள், மானிடவர்க்கத்தை உய்விக்கும் நிகழ்ச்சிகள், மானிடவர்க்கத்துக்கே இழிவான பாதகங்கள் முதலியவற்றிற்கு மத்திய கேந்திரப் பிரதேசம் ஞாபகச் சின்னமாக இருந்து வருகிறது எனலாம்!




# Advertisers... get the TRUTH about the media you use !

As an advertiser, it is vital for you to know exactly how many readers you get for each rupee spent on advertising.

More than 125 leading publications are now members of the Audit Bureau of Circulations — enough to conduct a full-scale, 13 language national advertising campaign in India, Pakistan and Ceylon. Their circulation figures are subject to re-check at any time by ABC appointed auditors, and are passed on as half-yearly confidential certificates to ABC members.

If you want to know the truth about your advertising media, write today for full details of ABC membership!

**AUDIT BUREAU OF CIRCULATIONS LTD.**
Mubarak Manzil, Apollo Street
Fort, Bombay

The following advertisers and advertising agencies are already members of the ABC :—

ADVERTISERS :

Allied photographics Ltd., E. M. Allcock & Mohatta Ltd. Aspro Ltd. England. Atlantis (East) Ltd. Balmer Lawrie & Co. Ltd. Bombay Mutual Life Assurance Society Ltd. Boots Pure Drug Co. (India) Ltd. Burmah-Shell Oil Storage & Distributing Company of India Ltd. Caltex (India) Ltd. Central Tea Board. Corn Products Co. (India) Ltd. Dunlop Rubber Co. (India) Ltd. Glaxo Laboratories (India) Ltd. Godrej & Boyce Mfg. Co. Ltd. Imperial Chemical Industries (India) Ltd. Imperial Tobacco Co. of India Ltd. India Tyre & Rubber Co. (India) Ltd. Lever Brothers (India) Ltd. Lipton Ltd. Mullar & Phipps (India) Ltd. National Carbon Co. (India) Ltd. Parle Products Manufacturing Co. Ltd. Punjabi Chandu Halwai Karachiwala. Shalimar Paint, Colour & Varnish Co. Ltd. Tata Oil Mills Co. Ltd. Volkart Brothers.

ADVERTISING AGENCIES :

Advertising & Sales Promotion Co. Everest Advertising Ltd. Grant Advertising Inc. Greens' Advertising Service Agents. D. J. Keymer & Co., Ltd. Lintas Ltd. National Advertising Service Ltd. Press Syndicate Ltd. Shilpi Ltd. Sista's Ltd. F. D. Stewart Ltd. L. A. Stronach & Co. (India) Ltd. J. Walter Thompson Company (Eastern) Ltd.

**Inserted by the "KALKI" Madras**

THE TAMIL WEEKLY PUBLICATION WITH ABC CERTIFIED CIRCULATION






"வேம்பு, இங்கே வா! இந்தப் பந்தல் காலைத் தூக்கி நடு. என்னால் தூக்க முடியவில்லை" என்றார் அவன் மாமா.

உபகாரம் செய்வது என்றால் வேம்புவுக்கு எப்போதுமே ரொம்பப் பிடிக்கும். இப்பொழுது தானாகச் சந்தர்ப்பம் கிடைத்திருக்கிறதே! விடுவானா! வேம்பு ஓடி வந்து, பந்தல் காலைப் பிடித்து ஒரே மூச்சில் தூக்கி நிறுத்தினான். மாமா பந்தல் காலுக்கு நடுவிலே நிற்பதை அவன் கவனிக்கவில்லை. அவ்வளவுதான். பந்தல் காலோடு மாமாவும் மேலே போய், அந்தரத்தில் தலைகீழாகத் தொங்கினார்!

"அடே, போக்கிரிப் பயலே! என்னையும் சேர்த்துத் தூக்கி விட்டாயே! என்ன செய்வேன்!" என்று கதறினார் மாமா.

"அங்கேயே இருங்கள், மாமா! அவசரப் படாதீர்கள்! ஏணி கொண்டு வருகிறேன்!" என்று சொல்லிக் கொண்டே பந்தல் காலை விட்டு விட்டு வேம்பு உள்ளே ஓடினான்.

அவ்வளவுதான். அடுத்த வினாடி பந்தல் கால் மடேரென்று பக்கத்தில் இருந்த பீப்பாய் மேல் சாய்ந்தது. பந்தல் கால் சாயும்போது மாமா மட்டும் மேலே எப்படி இருப்பார்! ஆகவே மாமாவும் கூடவே சாய்ந்து பக்கத்தில் இருந்த பீப்பாய் ஜலத்தில் தொப்பென்று விழுந்தார். பந்தல் காலும் அவர் மேலே விழுந்தது. பீப்பாய் உடைந்து ஜலம் வெளியே பீறிட்டுக் கொட்டியது.



வேம்பு ஏணியுடன் ஓடி வந்தான். அங்கே மாமாவையும் காணோம், பந்தல் காலையும் காணோம்! திரும்பிப் பார்த்தான், வேம்பு. மாமா கிடந்த அலங்கோலக் காட்சி அவன் கண்ணில் பட்டது.

"ஏன், மாமா! நான்தான் உங்களை மேலேயே இருக்கச் சொன்னேனே! நான் ஏணி கொண்டு வருவதற்குள் உங்களுக்கு என்ன அவசரம்!" என்றான் வேம்பு.



மாமா எழுந்து, ஏணியைப் பிடுங்கி எறிந்து, ஆத்திரத்துடன் அவனைத் துரத்தினார்.

"மாமா ஓடாதீர்கள்! உங்களால் முடியாது. இருங்கள், நான் போய் ஜட்கா வண்டியை அழைத்துக் கொண்டு வருகிறேன்!" என்று சொல்லிவிட்டு ஓட்டமாய் ஓடிவிட்டான்.




கோணங்கி கோவிந்தன் என்று ஒருவன் இருந்தான். அவன் ஒரு கரடியை வளர்த்து வந்தான். அந்தக் கரடிக்குப் பல வித்தைகளைப் பழக்கியிருந்தான். ஜனங்களுக்குக் கரடியின் வித்தைகளைக் காட்டிப் பிழைத்து வந்தான்.

ஒருநாள் கோணங்கி கோவிந்தன், தன் கரடி செய்யும் வித்தைகளை ராஜாவுக்குக் காண்பித்துப் பரிசுகள் பெறவேண்டும் என்று ஆசை கொண்டான். ஆகவே, இதற்கு மறு நாளே கரடியை அழைத்துக் கொண்டு கோணங்கி கோவிந்தன் புறப்பட்டான்.

அவன் இருந்த ஊரிலிருந்து, ராஜா இருந்த தலைநகரம் வெகு தூரத்திலிருந்தது. கோவிந்தன் புறப்பட்டு இருட்டுகிற சமயத்தில் ஒரு காட்டுக்குள் நுழைந்தான். ஆம், அவன் போக வேண்டிய வழியெல்லாம் காடும் மேடும் கழனியுமாகத்தான் இருந்தது. இரவு காட்டுக்குள் தங்கப் பயமாக இருந்தது. ஆகவே சுற்றுமுற்றும் பார்த்தான்—எங்கேயாகிலும் மனித சஞ்சாரம் தென்படுகிறதா என்று. ஒருவரும் காணவில்லை. ஆனால் கொஞ்ச தூரத்திலிருந்து சதக் சதக் கென்று கோடாலி கொண்டு மரம் வெட்டும் சத்தம் மட்டும் கேட்டுக் கொண்டிருந்தது. 'யாரோ இந்த வேளையில் இங்கே மரம் வெட்டுகிறார்கள். மரம் வெட்டுபவன் இருந்தால், அவன் வசிக்கும் குடிசையும் பக்கத்தில்தான் இருக்க வேண்டும். ஆகவே அவனைக் கெஞ்சிக் கேட்டுக் கொண்டு இன்றையப் பொழுதை அவன் குடிசையில் போக்கி விடலாம்' என்று தீர்மானித்துக் கொண்டான் கோவிந்தன்.

பிறகு மரம் வெட்டும் சத்தம் வந்த திக்கை நோக்கி நடந்தான். ஒரு கிழவன் மரத்தை வெட்டிக் கொண்டிருந்தான். அவன் முகத்தைப் பார்த்தவுடனேயே கோவிந்தனுக்கு, இந்தக் கிழவன் மிகுந்த அன்புள்ளவன்; கட்டாயம் தங்க வசதி பண்ணித் தருவான் என்ற நம்பிக்கை ஏற்பட்டது. அவனருகில் சென்று தன் வரலாறு முழுதும் சொன்னான். பிறகு தன் விருப்பத்தையும் சொன்னான்.

“ஐயா, கோணங்கி கோவிந்தரே, உங்களையும் உங்கள் கரடியாரையும் என் குடிசைக்கு எவ்வளவோ சந்தோஷத்துடன் விருந்தாளிகளாக அழைத்துக் கொண்டு போவேன். ஆனால் அந்தக் காரியம் இன்று மட்டும் என்னால் செய்ய முடியாதே!” என்றான் கிழவன்.

“முடியாதா? ஏன் முடியாது?” என்று கேட்டான் கோவிந்தன்.

“ஏன் முடியாது என்றால், உங்கள் உயிருக்கு ஆபத்து வரும் என்பதனால்தான், இன்று என் குடிசைக்கு வரவேண்டாம் என்கிறேன்” என்றான் கிழவன்.

“பெரியவரே, இப்படியெல்லாம் மூடி மறைத்துப் பேசினால் எனக்கு ஒன்றும் விளங்காது. எல்லாம் விவரமாகச் சொல்லுங்கள்” என்றான் கோவிந்தன்.

“வருஷந்தோறும் இந்த நாளைக்கு என் குடிசைக்கு ஒரு பூதம் வருகிறது. அதற்கு ஒரு பெரிய இலை நிறையச் சாதம், பாயசம், பக்ஷணம் எல்லாம் பரிமாறி வைத்துவிட்டு வீட்டில் ஒரு ஜீவப்பிராணியில்லாமல் போய் விடவேண்டும். ராத்திரி நடுநிசியில் அந்தப் பூதம் வந்து சாப்பிட்டு விட்டுப் போகும். பூதம் வரும் வேளை, தப்பித்தவறி ஏதாகிலும் ஒரு உயிர் வர்க்கம் வீட்டிலிருந்து அதன் கண்ணில் பட்டு விட்டாலோ, தீர்ந்தது அந்த உயிரின் உயிர்” என்றான் கிழவன்.

“அப்படியா? எங்களுக்கு எங்கள் உயிரின் மேல் அவ்வளவு ஆசையில்லை. மேலும் அந்தப் பூதம்தான் என்ன செய்கிறது என்று பார்த்துவிடுவோமே!” என்றான் கோவிந்தன்.

“உனக்கு அவ்வளவு தைரியமிருந்தால், உன்னை என் குடிசைக்கு அழைத்துப் போவதில் எனக்கு யாதொரு ஆட்சேபமுமில்லை” என்றான் கிழவன்.

பிறகு கோவிந்தன், கரடி, கிழவன் மூவருமாகக் குடிசைக்குச் சென்றனர். குடிசையில் கிழவனின் மனைவி பூதத்துக்காக வேண்டி

வகை வகையான தின்பண்டங்கள் எல்லாம் செய்து வைத்திருந்தான். இவர்கள் போனதும் பூதத்துக்குப் பெரிய இலை போட்டுப் பரிமாறி விட்டுக் கிழவனும் கிழவியும் வெளியேறினர். கரடியும், கோவிந்தனும் மட்டுந்தான் குடிசையில் இருந்தனர். அவர்களுக்கு இருந்த பசியில், இலையில் பரிமாறப்பட்டிருந்த பக்ஷணங்களை யெல்லாம் கொஞ்சம் கொஞ்சம் ருசி பார்த்தனர். பிறகு அவர்களுக்குத் தூக்கம் வந்தது. கரடி ஒரு மூலையில் படுத்துக் கொண்டது; கோவிந்தன் பரண் மீது ஏறிப் படுத்துக் கொண்டான். பூதம் வந்தால் பார்க்க வேண்டுமல்லவா?

அன்றிரவு பூதம் வெகு நேரமாகியும் வரவில்லை. கோவிந்தன் பகல் எல்லாம் நடந்ததனால் ஏற்பட்ட அலுப்புத் தாங்காமல் அயர்ந்து தூங்கி விட்டான்.

விடியற் காலர் மணி மூன்றிருக்கும். பூதம் வந்தது. இலையைப் பார்த்தது. எல்லாத் தின்பண்டங்களிலும் கொஞ்சம் கொஞ்சம் கிள்ளப் பட்டிருந்ததைப் பார்த்தது. 'சரி, யாரோ இங்கே வந்திருக்கிறார்கள்' என்று ஊகித்தது. பிறகு முகர்ந்து பார்த்தது. அதன் மூக்குக்கு ஜீவப் பிராணிகளின் வாசனை தட்டுப்பட்டது. சரிதான் குடிசையில் யாரோ இருக்கிறார்கள் என்று ஊகித்தது. குடிசையில் சுற்று முற்றும் பார்த்தது. கருப்புக் கம்பளி மூட்டைபோலிருந்த கரடியைக் கவனிக்காமல் அதன் மூக்கைத் தொட்டது. நல்ல தூக்கத்திலிருந்த கரடி, பூதத்தின் ஸ்பரிசம் பட்ட மாத்திரத்தில் திடுக்கிட்டு எழுந்திருந்தது. 'பளார்' என்று பூதத்தின் கன்னத்தில் அறைந்து விட்டது! பூதம் வலி தாங்க மாட்டாமல் கன்னத்தைப் பிடித்துக் கொண்டு, 'ஓ' என்று அலறிக் கொண்டு ஓடியது.

பூதம், இத்தனை நாளும் 'நான்தான் பலசாலி, என்னை அடக்குவதற்கு ஆளே இடையாது' என்று நினைத்துக் கொண்டிருந்தது. இப்பொழுது இந்தக் கரடி அதை அடித்ததும், பயந்துவிட்டது. வெற்றியே கண்டு வந்தவர்கள், ஒரு தோல்வியுற்றால் பிறகு அவர்களால் எழவே முடியாது என்பார்கள். அது, இந்தப் பூதத்தின் விஷயத்தில் உண்மையாயிற்று. 'என்னை அடக்கக் கூடிய பெரும் பூதம் வந்து விட்டது; இனி என் கொட்டத்தை அடக்கிக் கொள்ள வேண்டியதுதான்' என்று நினைத்துக் கொண்டே காட்டுக்குள் ஓடி மறைந்தது.

பொழுது நன்றாய் விடிந்துவிட்டது. கிழவனும் கிழவியும் கோவிந்தனுக்கும், அவன் பிடித்து வந்த கரடிக்கும் என்ன ஆபத்து நேர்ந்ததோ என்று பயந்து கொண்டே குடிசையை நோக்கி வந்தார்கள். ஆனால் அவர்களுக்குப் பெருத்த ஆச்சரியம்தான் ஏற்பட்டது. கோணங்கி கோவிந்தனும் கரடியும் பூதத்துக்காகப் படைக்கப்பட்டிருந்த தின்பண்டங்களை யெல்லாம் வயிறு கொள்ளாமல் தின்று திணறிக் கொண்டிருந்தனர்.



பிறகு கோணங்கி, முதல் நாளிரவு நடந்தவற்றைப் பற்றி மிகவும் விரிவாக எடுத்துரைத்தான். அதைக் கேட்டுக் கிழவியும் கிழவனும் ஆச்சரியக் கடலில் மூழ்கினர்.

ஒரு வருஷம் சென்றது. பூதத்துக்குச் சோறு படைக்கும் நாள் வந்தது. இன்றைக்கு என்ன செய்வது; பூதத்துக்கு எப்படிச் சோறு படைப்பது என்று கவலைப் பட்டுக் கொண்டு உட்கார்ந்திருந்தான் கிழவன். அந்தச் சமயத்தில் உஸ்ஸ் என்ற சத்தம் கேட்டது. பிறகு அந்தச் சத்தம் அடங்கிற்று. அவன் எதிரில் அந்தப் பிரம்மாண்டமான பூதம் நின்றது.

பூதம், கிழவனைப் பார்த்து, 'உன் வீட்டில் ஒரு பிசாசு வைத்திருந்தாயே சென்ற வருஷம். அது இன்னும் அங்கேதான் இருக்கிறதா?" என்று கேட்டது.

"ஐயையோ! அதையேன் கேட்கிறாய்? அந்தப் பிசாசு என்னை விட்டுப் போகவே மாட்டேன் என்கிறது. போதாக் குறைக்கு அதற்கு ஐந்து குட்டிப் பிசாசுகள் வேறு பிறந்திருக்கின்றன! அவை படுத்தும் பாடு, ராம, ராம, சொல்லி முடியாது!" என்றான்.

"ஐயோ, அப்படியா? இனி உன் வீட்டுப் பக்கமே வருவதில்லை!" என்று சொல்லி விட்டு மறைந்தது!

* * *

அன்று மத்தியானம், கோணங்கி கோவிந்தன் ராஜசபையிலிருந்து நிறையப் பரிசுகள் வாங்கிக் கொண்டு, பல வர்ண உடை அணிந்து, ஒரே குதூகலத்துடன் வந்தான் கிழவன் வீட்டுக்கு.

"என்ன தாத்தா. சௌக்கியமா? உன் பூதம் சௌக்கியமா?" என்று கேட்டான்.

உடனே கிழவன் அன்று காலை நடந்தவற்றையெல்லாம் விவரமாகச் சொன்னான்! இருவரும் விழுந்து விழுந்து சிரித்தனர்.

"பொய் சொன்னாலும் பொருந்தச் சொல்ல வேண்டாமா, தாத்தா? என் கரடி ஆண் கரடியாயிற்றே!" என்று சொல்லி மேலும் விழுந்து விழுந்து சிரித்தான் கோணங்கி கோவிந்தன்!




"நான் கீல் வாயுவினால் மிகுந்த அவஸ்தைப் பட்டேன் — அதாவது, உடம்பு பூராவும் உள்ள வலியினால் சில சமயங்களில் வேலைக்கும் போக முடியாமலிருந்தது. நண்பன் ஒருவன் "க்ருஷன்" உப்புக்களை உபயோகித்துப் பார்க்குமாறு சிபாரிசு செய்தான். நான் அவ்வாறே செய்ததில், உடம்பு வலிகள் கொஞ்சங் கொஞ்சமாய் மறைந்து வந்தது. வேலைக்கும் யாதொரு தடங்கலின்றிப் போய் வருகிறேன். நான் முற்றிலும் புதிய மனிதனாய் விட்டதற்கு "க்ருஷ"னுக்கு வந்தனம்." —A. R.

விஷத்தன்மை கொண்ட கழிவு பதார்த்தங்கள் சரிவர வெளித்தள்ளப் படாமையால் குடல்களில் தேங்கி, கீல் வாயுவை உண்டாக்குகின்றன. "க்ருஷ"னிலுள்ள ஆறுவித முக்கிய உப்புக்கள் குடல்களையும் மூத்திரக் காய்களையும் சரிவர இயங்குமாறு தூண்டுவதால் இவ்விஷப் பொருள்களை சீக்கிரமாகவும் சுலபமாகவும் வெளியே தள்ளுகிறது. தினந்தோறும் ஒரு சிறு அளவு "க்ருஷன்" டீயிலோ, தண்ணீருடனோ உட்கொள்ளுவது உங்களைக் கீல் வாயுவினின்றும் விடுவிக்கும்.

**"க்ருஷன்"** உங்களை ஆரோக்யத்துடனும் சந்தோஷத்துடனும் இருக்க உதவுகிறது

KSM—1




நார்வே தேசத்துக் கதை : ஜோஹன் பார்கென்    மொழிபெயர்ப்பு : வாஞ்சி

அந்திப் பொழுதானதால் உலகத்தைச் செவ்வானம் கவிந்து கொண்டிருந்தது. மரங்களில் இலைகள் தக தக வென்று ஜொலித்துக்கொண்டிருந்தன. ஏரிக் கரையில் தங்க நிற அலைகள் மோதிய வண்ணமாக இருந்தன.

சோலைக்கு நடுவிலே இருக்கும் அந்த வீட்டின் வடபுறம் மாத்திரம் சிவப்பு நிறமாக இருந்தது. மற்றப் புறங்கள் எல்லாம் வர்ணம் அழிந்திருந்ததால் பழைய வெள்ளியைப் போல் மங்கிய வெண்மை நிறமாக இருந்தன.

மேற்படி வீடு அவ்விதம் இருக்கும் என்று அவன் எதிர்பார்க்கவில்லை. ஏனெனில், தன் பெற்றோருடன், தான் வளர்ந்த அந்த வீட்டின் நிறம் சிவப்பு என்றே அவன் அவளிடம் பல தடவையும் சொல்லியிருந்தான்.

வீட்டைத் திறந்து கொண்டு உள்ளே செல்லு முன் அவள் அவனை அழைத்துக் கொண்டு வீட்டைச் சுற்றிக் காட்டினாள். கடைசியாக, "இந்த வீடு சிவப்பு நிறமாக இருக்கும் என்று நான் முன்பே சொல்லவில்லையா!" என்றாள்.

"ஆமாம், ஆமாம்! சிவப்பு நிறம்தான்! நான் அதை ஆட்சேபிக்க வில்லையே!" என்றான் அவன்.

அவள் அந்த வீட்டையே பார்த்த வண்ணமாக இருந்தாள். அவனோ தன்னை மறந்து அவளையே பார்த்த வண்ணமாக இருந்தான்.

அப்போது அவள் என்ன சொன்னாலும் அதை ஒத்துக் கொள்ள அவன் தயாராக இருந்தான்! அவள் அப்போது என்ன செய்யச் சொன்னாலும் அதை யாதொரு ஆட்சேபனையுமின்றிச் செய்வதற்கும் தயாராக இருந்தான்!

"கதவைத் திறக்க வேண்டியது எப்போதும் ஆடவருடைய கடமை என்று நான் எங்கேயோ வாசித்திருக்கிறேன். வீட்டின் சாவி இதோ இருக்கிறது" என்று சொல்லி அவள் அவனிடம் ஒரு சாவிக் கொத்தைக் கொடுத்தாள்.

"இவற்றில் இந்த வீட்டின் சாவி எது!" என்று அவன் கேட்டான்.

"அதை நீங்கள்தான் யூகித்து எடுத்துக் கொள்ள வேண்டும்" என்றாள் அவள்.

அந்த வீட்டின் கதவு பெரியதாக இருந்தும் கூட அவன் மேற்படி கொத்தில் இருந்த சாவிகளில் மிகச் சிறியதை எடுத்து அதைத் திறந்தான். அந்தச் சாவியினால் அதைத் திறக்க முடியாது என்பது அவனுக்குத் தெரியும். இருந்தாலும் அப்போது ஏட்டிக்குப் போட்டியாக அவன் ஏதாவது செய்ய நினைத்தான்!

ஆனால் என்ன ஆச்சரியம்! கதவு எளிதில் திறந்து கொண்டு விட்டதே!

அவள் முகத்தில் புன்முறுவல் தவழ்ந்தது. "முதல் பரீட்சையில் தாங்கள் தேறி விட்டீர்கள்" என்றாள் அவள் குறும்பாக.

அவன் அவள் மீது கொண்டுள்ள காதல் நிறைவேறுவதற்கு அதுதான் முதல் பரீட்சையாம்!

அவள் அவ்வாறு கூறியது அவனுக்குத் தான் இன்பக்

அகில உலகச் சிறு கதைப் போட்டியில் முதல் பரிசு பெற்ற நாலு கதைகளில் இது இரண்டாவது கதையாகும். இதை எழுதிய ஜோஹன் பார்கென் நார்வே தேசத்தைச் சேர்ந்தவர். பத்திரிகாசிரியரான இவர் பல நாவல்கள், நாடகங்கள், சிறு கதைகள் எழுதிப் பிரக்யாதி பெற்றுள்ளார்.

கடலில் ஒரு படி இறங்கி விட்டது போல் தோன்றியது.

"ஏன் என்னைக் கதவைத் திறக்கச் சொன்னாய்! உனக்குப் பயமாக இருந்ததா!" என்று கேட்டான் அவன்.

"வெகு காலமாக மூடிக் கிடக்கும் ஒரு வீட்டைத் திறப்பதற்கு யாரும் தான் பயப்படுவார்கள்" என்று சமாதானம் சொன்னாள் அவள்.

"கதவைத் திறந்ததும் முதலில் பெண்ணுக்கு உள்ளே வழி விட வேண்டும்; அதுதான் ஒரு கனவானுக்கு அழகு என்று நான் எங்கேயோ வாசித்திருக்கிறேன்" என்றான் அவன்.

"அந்த விதிக்கு காலியாகக் கிடக்கும் வீடு விலக்காகும், தெரியுமா!" என்றான் அவன்.

அவன் உள்ளே சென்றான். எங்கும் இருட்டாக இருந்தது. ஜன்னலைத் திறக்கும்படி அவள் சொன்னாள்.

வெகு காலமாக அறையின் ஜன்னல் மூடிக் கிடந்ததால் அதை இலகுவில் திறக்க முடிய வில்லை. வெளியே இருந்து ஜன்னலைப் பிடித்துத் தள்ளும்படி அவன் அவளிடம் கூறினான். அவள் அவ்விதம் செய்யவே ஜன்னல் கதவுகள் திறந்து கொண்டன. அதன் பலனாக உள்ளே சிறிது வெளிச்சமும் காற்றும் புகுவது சாத்தியமாயிற்று.

இன்ப உணர்ச்சி வசப்பட்டவளாய் அவளும் உள்ளே வந்தாள்.

• • •



காலையில் அவன் வீட்டுக்கு வெளியே இருந்த கிணற்றிலிருந்து தண்ணீர் கொண்டுவந்த போது அந்த வீட்டைப் பார்த்தான். ஒரு ஜன்னல் மாத்திரம்தான் திறக்கப்பட்டிருந்தது.

அதைத்தவிர மற்றப்படி அந்த வீட்டின் வெளித் தோற்றம் யாரும் குடியிராத பாழ் வீடு போலவே இருந்தது. வெளியிலிருந்து பார்ப்பவர் யாரும் அந்த வீட்டில் அப்போது இரண்டு காதலர்கள் இருக்கிறார்கள் என்பதை அறிந்து கொள்ள முடியாது. இதை எண்ணியபோது அவனுக்குச் சிரிப்பு வந்தது.

அவள் களைப்பினால் அயர்ந்து தூங்கிக்கொண்டிருந்தாள். அவள் விழித்துக் கொள்வதற்குமுன் காப்பி போட்டுத் தயாராக வைக்க வேண்டும் என்று அவன் நினைத்தான். அவ்விதமே காப்பியும் போட்டு விட்டான்.

அவன் காப்பியை எடுத்துக் கொண்டு சென்றபோதுதான் அவள் கண்விழித்தாள்.

அவன் அன்புடன் கொடுத்த காப்பியை அவள் பருகியபோது, அவளது கண்கள் அவனுடைய

அவள் தயங்கினாள். பிறகு அவளும் அவனைப் பின் தொடர்ந்து தண்ணீரில் குதித்தாள்.

இருவரும் இந்த உலகத்தை மறந்து வெகுநேரம் தண்ணீரில் விளையாடிக் கொண்டிருந்தார்கள்.

"இந்த ஏரியில் மூழ்கி நீந்துவது மிகவும் ஆனந்தமாக இல்லையா!" என்று அவள் அவனைப் பார்த்துக் கேட்டாள்.

"இது ஏரியல்ல; சொர்க்கலோகத்தில் உள்ள இன்பக்கடல். அதில் அல்லவா மூழ்கி நீந்துகிறோம்!" என்றான் அவன்.

அவள் பரவசம் அடைந்தாள்.

• • •

அன்று அவர்கள் இரவு சாப்பிட்ட பின் சீக்கிரமாகவே படுத்துக் கொண்டு விட்டார்கள்.

அவள் அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்தாள்.

அவன் மெதுவாக எழுந்து வெளியே சென்றான்.



ஆனால் இன்றோ அவள் தன் இஷ்டப்படி அந்த இடத்தைச் சுற்றி வந்தாள். தனியாக வந்தும் இப்போது அவளுக்குச் சிறிதும் பயம் இல்லை. ஏனென்றால் அந்த வீட்டிற்குள் அவன் படுத்துக் கொண்டிருக்கிறான் அல்லவா!

இப்போது அந்த வீட்டில் யாருமே இராதிருந்தால்......! இவ்வாறு எண்ணியபோது அவளுக்குப் பயம் உண்டாயிற்று. "எதற்காகப் பயப்பட வேண்டும்! அவர்தான் அங்கே படுத்துக் கொண்டிருக்கிறாரே!" என்று தன்னைத்தானே சமாதானம் செய்து கொண்டாள்.

ஏரித் தண்ணீர் ஒரு பிரம்மாண்டமான கண்ணாடியைப் போல் காட்சியளித்தது. அதில் நட்சத்திரங்களின் பிரதி பிம்பமும் தெரிந்தது.

சிறுமியாக இருந்தபோது அதெல்லாம் அவளுக்கு அர்த்தமற்றதாகத் தோன்றின. ஆனால் இன்றோ...! இயற்கை எழிலின் ஒவ்வொரு அம்சமும் அவளது யௌவனப் பருவத்துக்கு உறுதுணையாக இருப்பது போல், அவளை உற்சாகப் படுத்துவது போல் தோன்றியது.

அன்றையக் கனவுகளுக்கும் இன்றைய உணர்ச்சிகளுக்கும் எவ்வளவு வேற்றுமை!

இச்சமயத்தில் சந்திரன் உதயமாயிற்று. பனியும் அதிகமாகப் பெய்யத் தொடங்கியது. குளிரால் அவளுடைய பற்கள் அடித்துக் கொண்டன.

"இனிமேல் இங்கு உட்காரக் கூடாது. வீட்டுக்குச் செல்ல வேண்டும்" என்று அவள் புறப்பட்டாள். வீட்டுக்கு அருகில் சென்றதும் அவளுக்குப் 'பகீர்' என்றது. ஒரு வேளை வீட்டில் ஒருவரும் இராவிட்டால்......! பதறிக்கொண்டே வீட்டுக்கு ஓடி வந்தாள்.

அவளை வரவேற்பதற்காக அவன் வாசற்படியில் நின்றுகொண்டிருந்தான்.

"நீ எங்கு சென்றாயோ என்று நான் பயந்துவிட்டேன்" என்று அவளை இறுகத் தழுவிக் கொண்டான்.

"நான் எங்கு எதற்காகச் சென்றேன்! ஊகித்துச் சொல்லுங்கள், பார்க்கலாம்" என்றாள் அவள்.

"வீட்டைச் சுற்றிப் பார்த்திருப்பாய். ஏரிக்கரைக்குச் சென்று அங்கே நட்சத்திரங்களையும் அவற்றின் பிரதிபிம்பத்தையும் பார்த்துக் கொண்டிருந்தாய் அல்லவா!" என்று கேட்டான் அவன்.

"ஆச்சரியமாக இருக்கிறதே! உங்களுக்கு எப்படித் தெரிந்தது!...சரி, அப்புறம் என்ன செய்தேன்!"

"அப்புறம் என்ன! சிறுமியாக இருந்தபோது கண்ட கனவுகளை யெல்லாம் பற்றிச் சிந்தனை செய்து கொண்டிருந்தாய் அல்லவா!"

"ஆமாம்!"

"பிறகு குளிராக இருந்தது. பயமாக இருந்தது. நான் எங்கேயாவது ஓடி விட்டால்......இவ்விதம் எண்ணியதும் நடுங்கிக்கொண்டு இங்கே ஓடி வந்துவிட்டாய்."

ஆச்சரியத்தினால் அவள் கண்கள் விரிந்தன. "என்ன மன ஒற்றுமை! என் செய்கைகளையும் எண்ணங்களையும் படம் பிடித்தாற் போல் சொல்லி விட்டாரே!" என்றது அவள் மனம்.

"நீங்கள் இரண்டாவது பரீட்சையிலும் தேறிவிட்டீர்கள்" என்றாள் அவள். அதைக் கேட்டு அவன் ஆனந்தம் அடைந்தான். எல்லையற்றச் சந்தோஷம் காரணமாக அவனால் அதிகமாகப் பேசக்கூட முடியவில்லை!

• • •

மறு நாள் காலையில் இருவரும் சேர்ந்து உலவச் சென்றனர். வெகு தூரம் சென்ற பின் இருவரும் பிரிந்து செல்லலாயினர். யாரோ முகம் தெரியாதவர்களைப் போல் அவன் ஒருவழியாகச் சென்றான். அவள் வேறு வழியாகச் சென்றாள். பிறகு திடீரென்று இருவரும் தற்செயலாகச் சந்திப்பதுபோல் சந்திப்பதற்காகத்தான்!

அவள் எங்கு சென்றாலும் அவளுடைய ஞாபகம் முழுதும் அவனிடமே இருந்தது. அவன் எங்கு சென்றாலும் அவனுடைய ஞாபகம் முழுதும் அவளிடமே இருந்தது.

வெகு நேரம் கழித்துத் தற்செயலாகச் சந்திப்பதுபோல் இருவரும் சந்தித்தனர்.

தனக்காகவே அவன் சிருஷ்டிக்கப்பட்டிருப்பது போல் அவளுக்குத் தோன்றியது. தனக்காகவே அவள் சிருஷ்டிக்கப்பட்டிருப்பதுபோல் அவனுக்குத் தோன்றியது.

இருவருடைய கண்களும் பரஸ்பரம் பேசிக் கொண்டன! இருவருடைய ஹிருதயங்களும் ஒன்றையொன்று தழுவிக் கொண்டன!

"நான் கடைசிப் பரீட்சையிலும் தேறி விட்டேன்" என்று அவன் பரவசம் அடைந்தான்.

அதைப் பூரணமாக ஆமோதிப்பதுபோல் அவன் அவளுடைய தோளின் மீது ஆனந்தமாகச் சாய்ந்தாள்.

* * *

"நம்முடைய வீட்டுக்குச் செல்லலாமா!" என்று கேட்டான் அவன்.

தன் காதுகளை அவளால் நம்ப முடியவில்லை.

இதற்கு முன் அவள் அந்த வீட்டுக்குச் செல்லலாமா என்று தான் அடிக்கடி சொல்லி வந்தாள். தன் தாய் தந்தையுடன் வாழ்ந்த அந்த வீட்டை நம் வீடு என்று அவன் சொன்னது இதுதான் முதல் தடவை!

தன் எதிர்கால விதியில் அவளுக்கு இருந்த சந்தேகம் பறந்தோடி விட்டது. அவள் இனி அவனுக்குச் சொந்தமாகி விட்டாள். என்றென்றும் அவனுக்குச் சொந்தமாகி விட்டாள். இனி அவளை அவனிடத்திலிருந்து யாரும் பிரிக்க முடியாது.



"நமது வீட்டின் நிறம் எப்படி!" என்றாள் அவள்.

"சிவப்பு தான். அதில் என்ன சந்தேகம்!"

அவன் சிரித்தான். ஏன்! அந்த வீட்டின் பெரும் பகுதி சிவப்பு நிறம் மறைந்து வெண்மையாக இருந்தும்கூட, அவன் மேற்படி வீடு சிவப்பு நிறம் என்று சொன்னதற்காகத்தான்!

ஏனெனில் அந்த வீடு சிவப்பாக இருக்கும் என்று தான் அவள் ஏற்கெனவே அவனிடம் சொல்லியிருந்தாள். அவள் வார்த்தையைப் பொய்யாக்க அவன் விரும்ப வில்லை! அவள் வார்த்தை பொய்யாகி விடக்கூடாது என்பதற்காக அவன் ஒரு பொய்யை சொல்லத் தயங்க வில்லை! காதலியின் உள்ளத்தைப் புண்படுத்த எந்தக் காதலனுக்குத்தான் மனம் வரும்! ஆகவேதான் அவன் அந்தப் பொய்யைத் தெரிந்தே, வேண்டுமென்றே சொன்னான். அவன் பொய் சொன்னதில் என்ன தவறு!

காதலர் இருவரும் கடைசி முறையாக அந்த வீட்டை விட்டுப் புறப்பட வேண்டிய நேரம் நெருங்கியது. ஏனெனில் இனி அவர்கள் கணவனும் மனைவியுமாகத் தானே அங்கு வருவார்கள்!

உள்ளே இருந்த சாமான்களை எல்லாம் முன்போலவே இருந்த இடத்தில் ஒழுங்காக எடுத்து வைத்தனர்.

அவள் இருதயத்தில் எத்தனையோ எண்ணங்கள் எழுந்தன. அவளுடைய மனமாகிற கடலில் இன்ப அலைகள் மோதுவது போல் தோன்றியது.

கதைகளில் அவள் இளவரசர்களையும் இளவரசிகளையும் பற்றி வாசித்திருக்கிறாள். இப்போது அந்த இளவரசிகளில் தான் ஒருத்தி என்றும் அழகிய இளவரசர்களில் அவன் ஒருவன் என்றும் அவளுக்குத் தோன்றியது.

கொடி துவண்டு வருவது போல அவள் அவன் அருகில் ஓடி வந்தாள். மொட்டு மலர்வது போல் அவளது குழந்தைப் பருவம், இனி என்றும் திரும்பி வராத குழந்தைப் பருவம் யௌவனப் பருவமாக மலர்ந்தது.

காதலர் இருவரும் இன்பக் கடலில் மூழ்கினர்!

*

சார்ஜண்ட் (புதிதாக ராணுவத்தில் சேர்ந்திருக்கும் சிப்பாயைப் பார்த்து):—உன்னுடைய துப்பாக்கியைச் சுத்தம் செய்வதற்கு எடுத்துக் கொண்டால் நீ முதலில் எதை அதில் முக்கியமாகக் கவனிப்பாய்?

சிப்பாய்:— துப்பாக்கியின் நம்பரைத் தான் முக்கியமாகக் கவனிப்பேன்.

சார்ஜண்ட் (ஆச்சரியத்துடன்):— அது என்னத்துக்காக?

சிப்பாய்:—அது என்னுடைய துப்பாக்கி தானா என்பதை நிச்சயம் செய்து கொள்வதற்காகத் தான்!

*






## 21. கல்யாணப் பரிசு

“பூங்குளம் ஜமீன்தாரைக் கொன்றவன் இவன்தான். சரி எழுந்திருங்கள். முதலில் ராஜாளி மடத்திற்குச் சென்று அவனைக் கைது செய்ய வேண்டும். ஏய், மூன்னூற்று நாற்பத்திரண்டு, அறுநூற்று முப்பத்திரானு...'' என்று சப் இன்ஸ்பெக்டர் போலீஸ் ஜவான்களையெல்லாம் இலக்கமிட்டுக் கூப்பிடலானார் ஜரூராக.

டாக்டர் அவரைச் சமாதானப்படுத்தி ஆசனத்தில் அமரச் செய்து, ''அவசரப்படாதீர்கள். இன்னொரு முக்கியமான விஷயம் உங்களிடம் சொல்ல வேண்டும்'' என்றார்.

''என்ன!'' என்று சொல்லி சப் இன்ஸ்பெக்டர் குறிப்பாக டாக்டரின் முகத்தைப் பார்த்தார்.

''நேற்று இரவு ராஜாளி மடத்தில் ஒரு கொலை நடந்திருக்கிறது'' என்றார் டாக்டர்.

''நேற்று இரவு ஒரு கொலை நடந்திருக்கிறதா! அந்த வேலைக்காரியாக நடித்தவன் தானே அதையும் செய்திருக்கிறான்!'' என்று கேட்டார் இன்ஸ்பெக்டர் துடிப்புடன்.

''இல்லை. அந்த வீட்டு எஜமானியே தன் கணவனைக் கத்தியால் குத்திக் கொன்றிருக்கிறாள்'' என்றார் டாக்டர்.

சப் இன்ஸ்பெக்டருக்கு இது பேரிடி போலிருந்தது. ''என்ன! அந்த வீட்டு எஜமானியே தன் கணவனைக் கத்தியால் குத்திக் கொன்று விட்டாளா! ஆச்சரியமாய் இருக்கிறதே!''

''ஆமாம்! அவளை நினைத்தால் எனக்குப் பரிதாபமாக இருக்கிறது. அவள் தன்னையும் ஒன்றும் அறியாத அபலைப் பெண் ஒருத்தியையும் முரட்டுச் சுபாவமுள்ள தன் கணவனிடமிருந்து காப்பாற்றிக் கொள்வதற்காகக் கொலை செய்யும்படி ஏற்பட்டு விட்டது'' என்றார் டாக்டர்.

''சொந்தக் கணவனையா! இதென்ன அநியாயமாக இருக்கிறதே! இது உங்களுக்கு எப்படித் தெரியும்!'' என்றார் இன்ஸ்பெக்டர்.

''நேற்று இரவு அந்த மனிதனைக் கத்தியால் குத்திய பிறகு என்னைச் சிகிச்சை செய்வதற்குக் கூப்பிட்டு அனுப்பினாள்'' என்றார் டாக்டர்.

''அழகாக இருக்கிறதே, முதலில் கத்தியால் குத்திவிட்டுப் பிறகு சிகிச்சை செய்ய டாக்டரை அழைக்கிற லட்சணம்...!''

''என்ன செய்வது! ஆத்திரத்தில் செய்து விட்டாள். பிறகு பச்சாத்தாபப்பட்டு ஒரு வேளை சிகிச்சையினால் பிழைத்தாலும் பிழைக்கட்டும் என்ற எண்ணத்தோடு என்னைக் கூப்பிட்டனுப்பினாள். தவிர, அவள் என்னைக் கூப்பிட்டனுப்பியதற்கு வேறு முக்கிய காரணமும் இருந்தது. அவளுடைய பாதுகாப்பில் வளர்ந்த தன்னுடைய தங்கையின் பெண்ணை என் வசத்தில் ஒப்படைத்து நான் அந்தப் பெண்ணைக் கல்யாணம் செய்து கொண்டு காப்பாற்ற வேண்டுமென்று வேண்டிக் கொண்டாள்......''

''மிகவும் அழகாக இருக்கிறதே, கதை! உங்களிடம் அந்தப் பெண்ணை ஒப்படைத்து விட்டுத் தான் தலைமறைவாக எங்கேயாவது ஓடி விடலாம் என்று தீர்மானித்தாள் போலிருக்கிறது. நீங்கள் மிகவும் சாவகாசமாக இந்தக் கதையைச் சொல்லுகிறீர்களே! இத்தனை நேரம் அவள் எங்கு போய் விட்டாளோ! சரி, இனிமேல் தாமதிக்க நேரமில்லை. இப்பொழுதே புறப்பட வேண்டும். நீங்களும் என்னோடு அவசியம் வரவேண்டும்'' என்று சொல்லி ஆசனத்தை விட்டு எழுந்தார் சப் இன்ஸ்பெக்டர்.

டாக்டர் இனி மேலும் அவரைத் தடுத்து நிறுத்த இஷ்டப்படவில்லை. அவரும் புறப்படுவதற்குத் தயாரானார். மருதப்பனுக்கு எல்லாம் வியப்பிற்கு மேல் வியப்பாக இருந்தது. ராஜாளி மடத்தில் முதல் நாள் இரவு ஒரு கொலை நடந்திருக்குமென்று அவன் நினைக்கவே யில்லை. அந்தப் பயங்கரமான வீட்டிலிருந்து தன் காதலி பொன்னி எவ்வித அபாயமும் இல்லாமல் தப்பினாளே என்பதற்காக அவன் கடவுளைப் பூரணமான மனத்தோடு பிரார்த்தனை செய்து கொண்டிருந்தான்.

சப் இன்ஸ்பெக்டர் இரண்டு மூன்று ஜவான்கள் பின்தொடர டாக்டரோடு சொக்கிக் குளத்திற்குப் பிரயாணமானார். வழிநெடுகச் செங்கம்மாளைப்

பற்றிய கதையை யெல்லாம் கூறிக்கொண்டே வந்தார். செங்கம்மாவின் வரலாற்றைக் கேட்டு விட்டு டாக்டருக்கும் மருதப்பனுக்கும் ஏற்பட்ட வியப்பைச் சொல்லி முடியாது.

"செங்கம்மா என்று மாறு பெயர் பூண்ட ராஜேஸ்வரி பூங்குளம் ஜமீன்தார் சொக்கப்ப உடையாரைத் தன் அழகில் சொக்க வைத்து விட்டாள். ஆசை அன்பு பாசமெல்லாம் அளவு மீறி வளர்ந்தது. சொக்கப்பருக்குச் சொந்த மனைவிகளாக மூன்று பேர் உண்டு. இருந்தாலென்ன! பையில் பணமும் உடலில் தெம்பும் மனத்தில் ஆசையும் உள்ளவர்களுக்கு ஏதேனும் லட்சியம் உண்டா! சில வருட காலம் ராஜேஸ்வரியின் வீடே கதியென்று கிடந்தார். ஆனால் அதற்குள் அவர் மனத்தை வலை போட்டு இழுக்க இன்னொரு மோகினி பூங்குளத்தில் அவதார மெடுத்து வந்தாள். அன்பு இடம் மாறியது. காதல் கை மாறியது. ஜமீன்தார் ராஜேஸ்வரியின் சிறையிலிருந்து மோகனாம்பாள் வீட்டுச் சிறைக்குத் தந்திரமாக மாறி விட்டார். காதற் கிளி கூட்டை விட்டுப் பறந்து ஓடிவிட்டதால் ராஜேஸ்வரியின் மனம் புழுங்கியது; பொருமியது. உடல் சோர்ந்தாள்; உள்ளம் சோர்ந்தாள். காதலருக்குத் தூதுக்குமேல் தூதாக விட்டாள். ஓலைக்கு மேல் ஓலையாக எழுதினாள். கெஞ்சினாள்; கூத்தாடினாள். கோபமாகவும் பயமாகவும் சொல்லிப் பார்த்தாள். ஒன்றும் பலிக்கவில்லை. ஜமீன்தார் மோகனாம்பாளின் மோக மயக்கத்திலாழ்ந்து விட்டார். மோகனாம்பாள் ஜமீன்தாரைத் தன் கைப் பதுமையாக்கி வைத்திருந்தாள். அதோடு மட்டுமல்ல; ராஜேஸ்வரியைப் பூங்குளத்தை விட்டே துரத்துவதற்குத் திட்டமிட்டாள்.

ராஜேஸ்வரி வசித்து வந்த வீடு ஜமீன்தார் அவளுக்கு அன்புக் காணிக்கையாக அளித்தது. மோகனா ராஜேஸ்வரியை அந்த வீட்டை விட்டுத் துரத்திவிட ஏற்பாடு செய்தாள். ஜமீன்தாரின் ஆட்கள் ராஜேஸ்வரியின் வீட்டிற்குப் படை எடுத்துப் போய் அவளை மிரட்டி அந்த வீட்டை விட்டுப் பலாத்காரமாக அவளை வெளியேற்றி விட்டார்கள். அதன் பலனாக ராஜேஸ்வரி வேறொரு சிறு வீட்டில் குடி புகுந்தாள்.

ஜமீன்தார் ராஜேஸ்வரிக்கு ஒரு வைர மாங்காய் மாலை வாங்கிக் கொடுத்திருந்தார். அந்த வைர மாங்காய் மாலையை எப்படியாவது அவளிடமிருந்து திருப்பி வாங்கித் தனக்குத் தந்துவிட வேண்டும் என்று மோகனா ஜமீன்தாரை வற்புறுத்தினாள். ஜமீன்தார் முதலில் அதற்கு இணங்கவில்லை. ஆனால் மோகனாவின் பிடிவாதம் அதிகமாகவே அவளுடைய விருப்பத்திற்கு இணங்கும்படியாகி விட்டது. ராஜேஸ்வரியிடம் சென்று வைர மாங்காய் மாலையை வாங்கிக் கொண்டு வரும்படி ஒரு பணியாளை ஏவினார். ராஜேஸ்வரி ஜமீன்தாரே வந்தால் கொடுத்து விடுவதாகச் சொல்லி அனுப்பினாள். ராஜேஸ்வரி ஜமீன்தார் தன் வீட்டிற்கு வந்தால் அவருடைய பிரிவினால் தனக்கு ஏற்பட்டுள்ள இதய தாபத்தைச் சொல்லி அவர் மனத்தை மாற்றலாம் என்று நினைத்தாள். அலங்கார பூஷிதையாய் இருந்து அவரை மயக்கி மறுபடியும் தன் வசமாக்கிக் கொள்ளலாம் என்று நினைத்தாள். அவர் தன் விருப்பத்திற்கு இணங்காவிடில் ஏதாவதொரு வகையில் அவர் தனக்குச் செய்த துரோகத்திற்காக வஞ்சம் தீர்த்துக் கொண்டுவிடலாம் என்றும் முடிவு செய்திருந்தாள். ஜமீன்தார் ராஜேஸ்வரியின் வீட்டிற்குச் செல்ல முதலில் இஷ்டப்படவில்லை. வைர மாங்காய் மாலையை எப்படியாவது வாங்கிவிட வேண்டுமென்ற ஆர்வம் மோகனாவுக்கு அதிகமாய் இருந்ததால் அவர் ராஜேஸ்வரியின் வீட்டிற்கு வரும்படியான நிர்ப்பந்தம் ஏற்பட்டு விட்டது.

அன்று இரவு ராஜேஸ்வரி ஜமீன்தாரை எதிர்பார்க்கவே யில்லை. அவரைக் கண்டதும் உவகையோடும் உபசாரத்தோடும் வரவேற்றாள். ஆனால் ஜமீன்தார் அவளுடைய உபசாரத்தை யெல்லாம் லட்சியம் செய்யவே இல்லை. ஏதோ கடன் கொடுத்தவன் அதிகாரத்துடன் கேட்க வருவது போல்தானிருந்தது அவருடைய நிலை. ராஜேஸ்வரி அவர் தன்னை விட்டுப் பிரிந்து சென்றது குறித்துக் கதறினாள்; மன்றாடினாள். அவரிடம் தான் கொண்டிருக்கும் அளவற்ற காதலையும் பக்தியையும் எடுத்துச் சொல்லி உருகினாள். கடந்த காலங்களில் அவர்கள் இருந்த நிலையை ஞாபகப்படுத்தினாள். என்ன சொன்னால் என்ன! ஜமீன்தாரின் மனது இளகவில்லை. அவர் மனத்தில் இரக்கமோ, அனுதாபமோ ஏற்படவேயில்லை. ராஜேஸ்வரியை ஒரு தாசியாகத் தான் மதித்தார். அவருடைய நோக்கமெல்லாம் மாங்காய் மாலையை வாங்கிக் கொண்டு போக வேண்டு மென்பதிலேயே இருந்தது. ராஜேஸ்வரி மாங்காய் மாலையைக் கொடுக்கச் சம்மதிக்கவில்லை. இரவு பன்னிரண்டு மணி வரையில் இருவருக்கும் வாக்குவாதம் நடந்தது. கடைசியில் ஜமீன்தார் அவளிடமிருந்து பலாத்காரமாக அந்த நகையைப் பறித்துக் கொண்டு போக யத்தனித்தார். ஆனால் ராஜேஸ்வரி அவருடைய பலாத்கார முயற்சிக்கு இடங் கொடுக்கவில்லை. கண நேரத்தில் அவருடைய மென்னியை அழுத்திப் பிடித்து உயிரைப் பலி வாங்கிக் கொண்டாள். ஜமீன்தாரைக் கொன்ற பிறகு அவள் கண நேரம் கூட அங்கு



தரிக்கவில்லை. விலையுயர்ந்த தன்னுடைய ஆப ரணங்களையும் ஆடைகளையும் எடுத்துக் கொண்டு எங்கோ ஓடி விட்டாள். இவ்வளவு காலமும் மறைவாக இருந்த ராஜேஸ்வரி என்னும் செங்கம்மாவின் பூர்வீக வரலாறு இதுதான்.''

எல்லோரும் வெறுக்கக் கூடிய உருவமாக விளங்கிய செங்கம்மாவின் பூர்வ கதையை சப் இன்ஸ்பெக்டரின் மூலமாகக் கேட்ட டாக்டருக்கு அவளிடம் கூட எல்லையற்ற அனுதாபம் ஏற்பட்டது.

சப் இன்ஸ்பெக்டரும் டாக்டரும், ஜவான்களும் ராஜாளி மடத்தை நோக்கி வண்டியில் வந்து கொண்டிருந்த பொழுது ஜவான்களில் ஒருவன், ''அதோ, அங்கே ஏதோ ஒரே புகைச்சலாய் இருக்கிறதே!'' என்றான்.

எல்லோரும் ஒரே சமயத்தில் அந்த ஜவான் சுட்டிக் காட்டிய திசையை நோக்கினர்.

ஆம்! தோப்புக்களால் சூழ்ந்திருந்த சொக்கிக் குளத்தில் ராஜாளிமடம் இருந்த திசையிலிருந்து தான் அந்தப் பெரும்புகை எழுந்து கருமேகத் திரள் போல் வான மண்டலத்தை மறைத்தது.

வேதாவையும் பொன்னியையும் அழைத்துக் கொண்டு டாக்டர் பரசுராமன் ராஜாளிமடத்தை விட்டுச் சென்றவுடன் கற்சிலைபோல் மரகதம் சிறிது நேரம் வரையில் அந்த வீட்டுத் தாழ்வாரத்திலேயே நின்று கொண்டிருந்தாள். அவள் கண்களிலிருந்து தாரை தாரையாக நீர் பெருகிய வண்ணம் இருந்தது. அவளது உடலும் உள்ளமும் நிலைக்காமல் ஆடின. எல்லாம் முடிந்துவிட்டது. எல்லாவற்றிற்கும் அவள் ஒரு முடிவு கண்டு விட்டாள். ஆனால் இன்னும் அவள் இருக்கிறாள். அந்த ராஜாளி மடம் இருக்கிறது. அவள் இன்னும் இந்த உலகத்தில் இருக்க வேண்டியதுதானா! அந்தப் பயங்கரமான கட்டிடமும் இருக்க வேண்டியது அவசியந்தானா!



அவள் மெதுவாக நடந்தாள். செங்கம்மா...! திடீரென்று வேலைக்காரி செங்கம்மாவின் ஞாபகம் அவளுக்கு ஏற்பட்டது. அவளைப்போல் ஒரு வேலைக்காரி அவளுக்கு எங்கிருந்து அகப்படப் போகிறாள்! மரகதத்தின் குணத்திற்கும் கொள்கைக்கும் ஒத்தாற்போல் செங்கம்மாவின் குணமும் கொள்கையு மிருந்ததே! செங்கம்மா எங்கிருக்கிறாள் என்று மரகதம் அப்பொழுது தேடவில்லை. செங்கம்மாவுக்குக் கொஞ்சம் உயிரின்மேல் ஆசை இருந்தது என்று மரகதத்திற்குத் தெரியும். அவள் எப்பொழுதோ அந்த இடத்தை விட்டுத் தப்பித்து ஓடி விருப்பாள் என்றும் அவளுக்குத் தெரியும். இதனால் மரகதத்திற்கு அவள் மீது எவ்வித வருத்தமும் இல்லை. 'பாவம்! எப்படியாவது பிழைத்து உயிர் வாழட்டும்' என்ற இரக்கம்தான் அவளுக்கு அப்போது ஏற்பட்டது.

மரகதம் மேஜைமீது இருந்த சிம்னி விளக்கைக் கையில் எடுத்துக் கொண்டாள். மெதுவாக நடந்தாள். அந்த வீடு முழுவதையும் சுற்றிப் பார்க்க வேண்டுமென்பது அவளுடைய கடைசி ஆசை. ஒவ்வொரு அறையாகச் சென்று திறந்து பார்த்தாள். அந்த அறைகளில் அன்று அவள் புதுமையாக எதையும் காணவில்லை. சென்ற பதினேழு வருடங்களாக அவை அவளுக்கு எந்தக் கதையைச் சொல்லி வந்தனவோ, அதையேதான் அன்றும் சொல்லின. ஆனால் அந்தப் பழைய கதைகளைக் கேட்பதில், அவைகளை நினைத்துப் பார்ப்பதில் அப்பொழுது அவளுக்கு ஒரு மன நிம்மதி ஏற்பட்டது.

அதோ அந்தத் தாழ்வாரத்தில்தான் வேதா சிறு குழந்தையாக இருக்கும்போது ஓடி விளையாடுவான். கலகலவென்று சிரிக்கும் அந்தக் குழந்தையின் சிரிப்பு இப்பொழுதும் அவள் காதில் ஒலித்தது.

அதோ அந்த அறையில் அவளுடைய தங்கை அடக்கமும் நற்குணமும் பொருந்திய சாரதா உட்கார்ந்து ஏதேனும் துணிகளைத் தைத்துக் கொண்டிருப்பாள். இல்லாவிட்டால் புஷ்பங்களைத் தொடுத்துக் கொண்டிருப்பாள். அல்லது ஏதாவது புத்தகம் படித்துக் கொண்டிருப்பாள்.

கடந்த கால நிகழ்ச்சிகளை எல்லாம் அவள் அந்த அறைகளில் கண்டாள். ஒவ்வொரு காட்சியும் அவள் கண் முன்பு நிழல் படம்போலத் தோன்றி மறைந்தன.

இவைகளையெல்லாம் நினைத்துப் பார்ப்பதினால் அவளுக்கு அப்பொழுது என்ன பயன் ஏற்படப் போகிறது! அந்த நாட்கள் ஒருபோதும் திரும்பப் போவதில்லை. ஆனால் அவள் அதை எண்ணி எண்ணிப் பொருமினாள்; பெருமூச்சு விட்டாள். பயங்கரம் சூழ்ந்த அந்த மாளிகையில் அவள் பேய்போலக் கையில் ஒரு விளக்குடன் அடிமேல் அடிவைத்து நிழல்போல நகர்ந்தாள்.

அதோ, அதுதான் அவளுடைய படுக்கை அறை. அதற்குள் நுழைந்தாள். கட்டிலில் விரிக்கப்பட்டிருந்த படுக்கைமீது கை விளக்குடன் போய் உட்கார்ந்தாள். பித்துப் பிடித்தவள் போல் அந்த அறையைச் சுற்றித் தன் பார்வையைச் சுழலவிட்டு மெதுவாகக் கட்டிலிலிருந்து எழுந்து நடந்தாள்.

அதற்கு அடுத்த அறைதான் அவளுடைய கணவன் சிவப்பிரகாசம் மாண்டு கிடக்கும் அறை. அந்தக் கட்டிடத்தில் எல்லா இடத்தையும் அவள் பார்த்து விட்டாள். கடைசியாக அந்த அறையைத்தான் அவள் பார்க்க வேண்டும்.

மெதுவாக அந்த அறையினுள் நுழைந்தாள். கட்டிலில் கிடத்தப்பட்டிருந்த பிரேதத்தை

உற்று நோக்கினாள். அவள் உடல் நடுங்கியது. துக்கம் தாங்காமல் அவள் உள்ளம் குமுறியது. அவளுடைய கையிலிருந்த விளக்கு நழுவித் தரையில் விழுந்தது. அவள் அலறிய வண்ணம் கட்டிலில் கிடந்த பிரேதத்தின்மீது விழுந்து விசித்து விசித்து அழுதாள். அவள் ஒரு காலத்தில் எந்த மனிதனை அந்தரங்கத்தோடு காதலித்தாளோ, எந்த மனிதனை இரக்கமில்லாமல் கொன்றாளோ அந்த மனிதனின் பிரேதத்தின்மீதே விழுந்து புரண்டு புரண்டு அழுதாள். அவளுடைய இளமைப் பருவத்தில் நடத்திய இன்ப விளையாட்டுக்களையெல்லாம், காதல் நிகழ்ச்சிகளையெல்லாம் அவளால் எப்படி மறக்க முடியும்! அந்தப் பிரேதத்தின்மீது சாய்ந்து கண்களிரண்டையும் மூடிச் சிறிது நேரம் கனவு லோகத்தில் சஞ்சரித்தாள். வாலிப வயதில் சிவப்பிரகாசம் எவ்வளவு அழகாய் இருந்தார்! எவ்வளவு இனிமையாகப் பேசுவார்! அவரிடம் அவள்தான் எவ்வளவு காதல் கொண்டிருந்தாள்! அவருடைய அழகிலும் அன்பு வார்த்தைகளிலும் மயங்கித் தன் தகப்பனுக்கும் சகோதரிகளுக்கும் கூடத் துரோகம் செய்யச் சித்தமாய் இருந்தாளே! இதையெல்லாம் அவள் நெஞ்சம் மறந்துவிடுமா!

பளிச்சென்று அந்த அறையில் ஒரு ஒளி ஏற்பட்டது. புகையும் நாற்றமும் எழுந்தன. அவள் மெதுவாகக் கண்ணைத் திறந்து பார்த்தாள். ஆனால் அந்தப் பிரேதத்தை இறுகத் தழுவி இருந்த கைகளை மாத்திரம் அவள் எடுக்கச் சிறிதும் துணியவே இல்லை.

அவள் கைவிளக்கைக் கீழே நழுவவிட்டதினால் அந்த அறையில் தரையில் விரிக்கப்பட்டிருந்த விரிப்புத் தீப்பிடித்து எரிந்து கொண்டிருந்தது. இவ்வளவு நேரமும் மரகதம் அதைக் கவனிக்கவில்லை. விளக்கிலிருந்த எண்ணெய் நாலா புறமும் சிதறிப் பரவியதினால் வெகு சீக்கிரமாகத் தீ நாலா புறமும் பரவியது. மரகதம் அந்தத் தீயைக் கண்டு பதட்டமடையவில்லை. தீ க்ஷண நேரத்தில் அந்த அறை முழுவதும் சூழ்ந்தது. மரகதம் பித்துப் பிடித்தவள்போல் கலகலவென்று ஒரு பேய் சிரிப்புச் சிரித்துவிட்டுச் சவத்தின் மார்பில் தன் தலையைப் புதைத்துக் கொண்டு இரு கண்களையும் இறுக மூடிக் கொண்டாள்.



டைரக்டர்:—இந்தக் காட்சியில் கதாநாயகியின் முகத்தை அவலட்சணமாகக் காட்ட வேண்டுமே! என்ன செய்வது?

'மேக்அப்' செய்பவர்:—அது ஒன்றும் பிரமாதம் இல்லை. கதாநாயகியின் முகத்தை 'மேக் அப்' செய்யாமல் விட்டு விட்டால் போகிறது!

• • •

ராஜாளி மடம் தீப்பிடித்து எரிந்து கொண்டிருந்தது. அந்தக் கட்டிடத்திலிருந்து எழுந்த தீ நாக்குகள் வானத்தையே தொட்டுவிடும்போல் இருந்தன. புகை யெழுந்து கருமேகம்போல் வானத்தைச் சூழ்ந்து மறைத்தது. அந்தச் சிறிய கிராமத்திலுள்ள குடியானவர்களெல்லாம் இதைக் கண்டு கதி கலங்கினர். எல்லோருமாகச் சேர்ந்து தீயை அணைக்க முயற்சி செய்தனர். சில நிமிட நேரத்தில் பக்கத்துக் கிராமங்களிலிருந்த ஜனங்களெல்லாம் கூடிவிட்டனர். பக்கத்திலிருந்த நீர் நிலைகளிலிருந்து தண்ணீர் எடுத்து அந்தத் தீயை அணைக்கப் பெருமுயற்சி செய்தனர்.

இந்தச் சமயத்தில்தான் டாக்டரும் சப் இன்ஸ்பெக்டரும் அவருடைய பரிவாரமும் அந்த இடத்திற்கு வந்து சேர்ந்தனர். ராஜாளி மடம் தீக்கிரையாகி அழிந்து கொண்டிருப்பதைக் கண்டு திகைப்படைந்து நின்றனர். என்ன செய்வது! அவர்களும் தீயை அணைக்க வேண்டிய முயற்சியில் ஈடுபடலாயினர். நூற்றுக் கணக்கான கிராம ஜனங்களின் முயற்சியால் இரண்டு மணி நேரத்தில் அந்தத் தீ அணைக்கப் பட்டது. தீ அணைக்கப் பட்டதால் என்ன பலன்! அந்தக் கட்டிடத்தின் முக்கால் பாகம் தீக்கிரையாகி விட்டது. அந்தப் பெரிய கட்டிடத்தின் மேல் தளம் முழுவதும் எரிந்து இடிந்து விழுந்திருந்தது. தீ யணைக்கப் பட்டிருந்தும் இன்னும் புகை யெழுந்து கொண்டிருந்தது. கிராமத்து ஜனங்களெல்லாம் தீயணைப்பதற்காகச் செய்த பெருமுயற்சியால் ஆயாசமடைந்திருந்தனர். அங்கு குழுமி யிருந்த பலரும் பலவிதமாகப் பேசிக் கொண்டிருந்தனர். சிலர் அந்த வீட்டிலுள்ளவர்கள் நெருப்பிற்குப் பலியாகி விட்டதாகச் சொல்லிக் கொண்டனர். சிலர் அவர்களே அந்த வீட்டைக் கொளுத்திவிட்டு எங்கோ ஓடி விட்டதாகச் சொல்லிக் கொண்டிருந்தனர். ஓரளவு உண்மை அறிந்த டாக்டர் பிரமை பிடித்தவர் போல் அந்தக் கட்டிடத்தையே பார்த்துக் கொண்டு நின்றார். அப்பொழுது அவர் மனத்தில் பலவிதமான குழப்பம் ஏற்பட்டது. மரகதமே அந்த வீட்டைக் கொளுத்தி விட்டு ஓடி இருப்பாளா! இருக்காது. அவர் மனம் அப்படித் தீர்மானமாக முடிவு செய்யத் தயங்கியது. ஏனென்றால் மரகதம் அவரிடம் பேசியதிலிருந்து தப்பித்து ஓடிவிடும் நிலைமையிலிருந்ததாக அவர் நினைக்க முடியவில்லை. மருதப்பனும் மாட்டுக் கொட்டடியில் தூணோடு கட்டப்பட்ட செங்கம்மா என்னவானாள்! ஒரு வேளை அவள் தப்பித்துக் கொண்டு இந்த வீட்டையும் நெருப்புக்கு இரையாக்கி விட்டுப் போய் விட்டாளோ! அவள் எப்படிக் கட்டை அவிழ்த்துக் கொண்டு விடுபட்டிருக்க முடியும்! ஒரு வேளை மரகதமே மாட்டுத் தொழுவத்திற்கு வந்து அவளை விடுவித்து அந்த வீட்டிற்கும் தீ வைத்து விட்டுப் போய்விட்டாளோ! டாக்டரால் எதையுமே திடமாகச் சிந்தித்து முடிவு காண முடியவில்லை. சப் இன்ஸ்பெக்டர் விஷயம் முழுவதையும் ஊகித்து அறிந்து கொண்டவர்போல், "என்ன டாக்டர் ஸார்! விஷயம் விளங்கியதா! எனக்கு அப்பொழுதே தெரியும். அந்த இரண்டு பெண் பிள்ளைகளும் பலே கைகாரிகள். அவர்கள் நம் கையில் சிக்கு

வார்களா! தப்பித்து ஓடும்போது இந்த வீட்டையும் கொளுத்திவிட்டு ஓடிப் போய் விட்டார்கள். என்றாவது ஒரு நாள் அவர்கள் போலீஸ் கையில் சிக்காமலிருக்க மாட்டார்கள்'' என்றார்.

டாக்டர் ஒன்றுமே பதில் சொல்லவில்லை.

"சரி, வாருங்கள். இனிமேல் என்ன செய்வது! உங்கள் வாக்குமூலத்தைக் கொடுங்கள். உங்களோடு இருந்த மற்றவர்களுடைய வாக்குமூலமும் வேண்டும். எல்லாவற்றையும் நான் பதிவு செய்து வைத்துக் கொள்கிறேன்'' என்று சொல்லி டாக்டரை அழைத்துக் கொண்டு சென்றார்.

அன்று சாயங்கிரம் எரிந்து போன ராஜாராணி மடத்திலிருந்து சோதனையின் போது மூன்று பிரேதங்கள் எடுக்கப்பட்டதாகப் போலீஸ் ஸ்டேஷனுக்குக் கிராமாதிகாரி செய்தி அனுப்பி இருந்தார். உடனே சப் இன்ஸ்பெக்டர் தன் பரிவாரங்களுடன் ராஜாராணி மடத்திற்குச் சென்றார். அந்தப் பிரேதங்கள் உரு விளங்காமல் இருந்தாலும் இன்னார்தான் என்று அறிந்து கொள்ளக் கூடிய அடையாளங்கள் இருந்தன. அந்தப் பிரேதங்கள் அரசாங்க வைத்தியசாலைக்குப் பரிசோதனைக்கு அனுப்பப்பட்டன. பரிசோதனைக்குப் பிறகு விசாரணை செய்யப்பட்டதில் சிவப்பிரகாசத்தைக் கொலை செய்த பிறகு மரகதம், தானே அந்த வீட்டையும் கொளுத்தி இருக்கிறான் என்று தீர்மானிக்கப்பட்டது. செங்கம்மாவிடமிருந்து மருதப்பன் கைப்பற்றிய நகைகளுக்கு வேதாவே உரிமையுள்ளவள் என்றும் தீர்மானிக்கப்பட்டு அந்த நகைகள் அவளிடம் ஒப்படைக்கப்பட்டன.

ராஜாராணி மடத்தில் அன்று இரவு என்ன நடந்தது என்ற உண்மையை அறிந்ததும் வேதா மனக் கலக்கமும் வேதனையும் அடைந்தாள். ஆனால் டாக்டரிடம் அவளுடைய மனோ வேதனையையும் கலக்கத்தையும் போக்கச் சரியான மருந்து இருந்தது. சில நாட்களில் அவளுக்குக் கணவராகிவிட்ட டாக்டர் பரசுராமனின் அந்தரங்கமான காதலையும் அன்பையும் விட அவளுடைய மனோ வேதனையை நீக்கி இன்பம் அளிக்கக் கூடிய மருந்து வேறு ஏது!

டாக்டரும் வேதாவும் கல்யாணம் செய்து கொண்டால் பொன்னியும் மருதப்பனும் சும்மா இருப்பார்களா! அவர்களும் கல்யாணம் செய்து கொண்டார்கள். பொன்னியின் கல்யாணத்தின் போது வேதாவும் டாக்டரும், மருதப்பன் செங்கம்மாவிடமிருந்து கைப்பற்றிய விலையுயர்ந்த நகைகள் முழுவதையும் அவர்களுக்குப் பரிசாக அளித்தனர். (முற்றும்)

# மழை வந்தது!

சித்திரை மாதத்துக் கடும் வெய்யில். கதிரவனின் கோர கிருத்தியங்களைத் தாங்க முடியாமல் செடி கொடிகளும் தங்கள் பசுமையை இழந்து வாடி வதங்கிக் கிடந்தன.

அந்தப் பெரிய வீட்டினுள்ளே யிருந்த முதியவர் வியாதியின் கொடுமையோடு பகலவனின் வெம்மையையும் தாங்க முடியாது தவித்துக் கொண்டிருந்தார். அந்த வீட்டு அம்மாள் அவர் அருகில் வியர்த்து விறுவிறுத்து நின்றபடி அவருக்கு விசிறிக் கொண்டிருந்தாள். பையன் கிட்டுவும் அருகில் நின்று கொண்டிருந்தான்.

"பார்த்தாயா? நாம் கோடை விடுமுறைக்கு உதகமண்டலம் போகலாமென்றிருந்தோம். எனக்கு வியாதி வந்து நம்மை அங்கு போக முடியாமல் தடுத்து விட்டது. என்னால் நீங்களும் இந்தக் கடும் கோடையைக் கஷ்டப்பட்டு அநுபவிக்க வேண்டியிருக்கிறது'' என்றார் முதியவர் வருத்தந் தோய்ந்த குரலில்.

"அதற்கென்ன செய்யமுடியும்? நமக்கு இந்த வருஷம் உதகமண்டலம் போகக் கொடுத்துவைக்கவில்லை. சிறிது மழைபெய்தாவது கோடையின் உக்கிரத்தைத் தணிக்கக் கூடாதா? ஒரு நல்ல மழை பெய்து விட்டால் போதும். இக் கஷ்டம் நாம் பட வேண்டாம்'' என்றாள் தன் நெற்றியிலிருந்து ஆறாகப் பெருகும் வியர்வையைத் துடைத்துக் கொண்டே.



இச்சமயத்தில் வாசலில் 'சோ' வென்று மழை கொட்டும் சத்தம் கேட்டது. கிட்டு மகிழ்ச்சியுடன், "அம்மா! நீ சொன்ன வாக்குப் பலித்து விட்டது. மழையும் வந்து விட்டது'' என்று கூறிக் கொண்டே வாசலுக்கு ஓடினான். அந்த வீட்டு அம்மாள் தன் ஆசை பலித்து விட்டதைக் கண்டு ஆனந்த மடைந்தாள். அவ்வீட்டின் முதியவரும், "பார்! நீ சொன்ன முகூர்த்தம் மழையும் வந்து விட்டது!'' என்று சந்தோஷப் பட்டார்.

இத்தருணத்தில் அவருடைய பையன் கிட்டு தலை தெறிக்க ஓடி வந்து, "அம்மா! அப்பா! எல்லோரும் சீக்கிரம் வெளியே ஓடி வாருங்கள். பக்கத்து வீட்டில் தீப் பிடித்து நம் வீட்டு மாடியிலும் பற்றிக் கொண்டிருக்கிறது!'' என்று கூறி அவர்களிருவரையும் கர கர வென்று கையைப் பிடித்து வாசலுக்கு இழுத்துச் சென்றான். மூவரும் உயிருக்குப் பயந்து வீட்டை விட்டு வெளியே ஓடினார்கள்.

தெருவில் தீயணைக்கும் கோஷ்டியார் கார்களில் இருந்து கொண்டு தண்ணீரைக் குழாய்களின் மூலம் மிகுந்த வேகத்துடன் பாய்ச்சித் தீயை அணைக்க முயன்று கொண்டிருந்தனர். அக்குழாய்களிலிருந்து தண்ணீர் 'சோ' என்ற இரைச்சலுடன் மழையைப் போல் வேகமாக அந்தக் கட்டிடத்தின் மேல் விழுந்து கொண்டிருந்தது. —பி. என். மணி



## நீங்கள் இன்று உங்கள் பற்களை மக்ளீன் செய்தீர்களா?

ஆம்! தினமும் அவள் இருதடவை மக்ளீன்ஸ் பெராக்ஸைட் பற்பசையை உபயோகிக்கிறாள். அவள் பற்கள் எவ்வளவு அழகாயிருக்கின்றன பாருங்கள்.

மக்ளீன் பெராக்ஸைட் பற்பசை உங்களுக்கும் கூட வசீகரமான புன்னகையையும், வெண்மையான பற்களையும், இனிய சுவாசத்தையும் அளிக்கக் கூடியது. மக்ளீன் தயாரிப்பில் சேர்க்கப்பட்டுள்ள பொருள்கள் ஈறுகளுக்கு வலுவளித்து அபாயகரமான புளிப்பு நீர்களை வாயிலிருந்து அகற்றி பற்களை வெண்ணிறமாக்கி, சொத்தை பிடிக்காமல் தடுக்கிறது— எல்லாம் ஒரே சமயத்தில் தான்.

சிறந்த பற்பசைதான் உங்கள் பற்களுக்கு நல்லது. எனவே இன்றே மக்ளீன்ஸ் உபயோகிக்கத் துவங்குங்கள்.

“உங்களது மக்ளீன்ஸ் பெராக்ஸைட் பற்பசை மற்றெதையும் விடச் சிறந்தது.”

**இன்றே மக்ளீன்ஸ் வாங்குக!**




HTY-2 TAM.

வியாபார விவரங்களுக்கு: ஜெ.எல்.மாரிசன், ஸன் அண்ட் ஜோன்ஸ் (இந்தியா) லிமிடெட் மஹாலக்ஷ்மி கோவிலுக்கு எதிரில், வார்டன் ரோட், பம்பாய் 26.

# உழைப்பும் உயர்வும்

கோமதி சுவாமிநாதன்

ஜனச் சந்தடி மிகுந்த அந்த ரஸ்தாவின் ஓரத்தில் புத்தப் புதிதான ஒரு 'பியூக்' கார் நின்று கொண்டிருந்தது. பின் சீட்டில் உருவத்திலும் செல்வத்திலும் பெரியவரான ஒரு நபர் ஒய்யாரமாக ஒரு ஓரத்தில் சாய்ந்து உட்கார்ந்தவாறு யோசனையில் ஆழ்ந்திருந்தார். டிரைவர் ஆசனம் காலியாக இருந்ததிலிருந்து அவன் எங்கேயோ இறங்கிப் போயிருக்கிறானென்று ஊகிக்க வேண்டியிருந்தது.

அந்த நீல நிறமுள்ள 'பியூக்'கின் சொந்தக்காரர் ஊரிலேயே பிரபல ஏற்றுமதி இறக்குமதி கமிஷன் வியாபாரியான நீலமேகம் என்று எல்லோருக்கும் தெரியும். சற்று அருகில் போய்ப் பார்த்தால் சாக்ஷாத் நீலமேகமே உட்கார்ந்திருப்பதைக் காணலாம்! ஆஸ்திரேலியாவிலிருந்து புறப்பட்டிருக்கும் 'எஸ். எஸ். அநாத ரக்ஷகா'வில் வந்து கொண்டிருக்கும் சரக்குகளைப் பற்றியோ, அடுத்த மாதத்தில் அமெரிக்கா போகும் வழியில் லண்டனில் இறங்குவோமா வேண்டாமா என்பது பற்றியோ தான் அவர் அவ்வளவு தீவிரமாக யோசித்துக் கொண்டிருக்க வேண்டும்! அதற்குக் கீழ்ப்பட்ட விஷயங்களுக்கு அவர் அதிகமாகச் சிந்தனா சக்தியை விரயப்படுத்துவதில்லை.

திடீரென்று அவருக்கு வலது கைப்புறமாக இருந்த ரஸ்தா பிளாட்பாரத்தில் ஓர் சந்தடி கிளம்பியது. பக்கத்துச் சந்து திருப்பத்திலிருந்து சுமார் நாற்பது ஐம்பது பேர் கொண்ட கூட்டம் ஒன்று பிரதம ரஸ்தாவில் அவர் காரைக் கடந்து சென்றது. "நல்லா கட்டி வைத்து உதைக்கணும்!" "திருட்டு ராஸ்கலுக்கு என்ன துணிச்சல்?" என்ற கூக்குரல்கள் அந்த ஜனத்திரளிலிருந்து எழுந்து கொண்டிருந்தன. நீலமேகம் அதிகச் சிரமப்படுத்திக் கொள்ளாமல் கழுத்தை மாத்திரம் சற்றுத் திருப்பி, அந்தச் சந்தடியைக் கவனித்தார். அவருக்கு விஷயம் ஒன்றும் புரியவில்லை. 'ஜேபடித் திருடன் போலிருக்கிறது' என்று நினைத்தார்.

அதே விநாடியில் எதிர்த்தாற் போலிருந்த கடைக்குச் சாமான்கள் வாங்கி வரச் சென்றிருந்த டிரைவர் மாணிக்கம் திரும்பி வந்து முன்பக்கத்துக் கதவைத் திறந்து கையிலிருந்த சாமான்களை வைத்தான். பிறகு தன் ஆசனத்தில் உட்காருவதற்காக வலது காலைக் காரினுள் எடுத்து வைத்தான்.

"மாணிக்கம்! என்ன கலாட்டா? கூட்டமாகப் போகுதே!" என்ற எஜமானரின் கேள்வி அவனைத் திடுக்கிடச் செய்தது. அப்படியே நின்று விட்டான். நீலமேகம் இப்படிப்பட்ட கேள்விகள் கேட்டு வெகு நாட்களாயின. வியாபார உலகத்திலிருந்து எந்த விநாடியிலும் அவர் திசை தப்பி வெளியுலகில் காலடி எடுத்து வைத்ததேயில்லை.

"யாரோ ஒரு சின்னப் பையன் பாரத் பவன் ஹோட்டலிலே வயிறு புடைக்கத் தின்றுவிட்டுச் சில்லறை கொடுக்காமல் ஓடி விட்டானும். ஹோட்டல் ஆட்கள் அவனைத் துரத்திப் பிடித்துக் கொண்டு வந்து விட்டார்கள். அந்தப் பயலுக்கு நல்ல அடி...."

மாணிக்கத்தை முடிக்க விடவில்லை நீலமேகம். "மாணிக்கம்! பாவம், அந்தப் பையன் கொடுக்க வேண்டிய துட்டைக் கொடுத்து விட்டு, அவனை இந்தப் பக்கமாக அழைத்துக் கொண்டு வா! இந்தா, ஒரு ரூபாய்!" என்று கூறிப் பர்ஸிலிருந்து ஒரு ரூபாய் நோட்டை எடுத்துக் கொடுத்தார்.

மாணிக்கத்திற்கு ஏற்பட்ட அதிர்ச்சி நீங்க வெகு நேரம் பிடித்தது. எஜமானர் தானா அப்படிப் பேசுகிறார்? அவனால் நம்ப முடியவில்லை. திடீரென்று யாரோ முன் பின் தெரியாத சிறுவனிடம் அவருக்கு ஏற்பட்டிருக்கும் பரிவும் அவனுக்கு விளங்கவில்லை. யோசனையிலாழ்ந்தவாறே அவன் 'பாரத் பவனை' நோக்கி நடந்தான்.

முதலாளி முன்னால் முகத்தைத் தொங்கப் போட்டவாறு நிற்கும் சிறுவனைப் பார்த்ததும் மாணிக்கத்திற்கே தன்னையறியாமல் ஓர் வித பச்சாத்தாபம் பிறந்தது. பத்தணாவிற்குச் சாப்பிட்டு விட்டுப் பதுங்கி ஓடிவிட்ட குற்றத்திற்காக அவன் முதுகில் ஏற்கெனவே நூற்றுக்கு மேற்பட்ட அடியும் குத்துக்களும் விழுந்திருந்தபோதிலும் பாரத் பவன் முதலாளியின் பரந்த உள்ளம் அவனை மன்னிக்கத் தயாராயில்லை. அவனை மேலும் எப்படிச் சித்திரவதை செய்யலாம் என்ற யோசனையில்தான் அவர் உள்ளம் ஆழ்ந்திருந்தது.

அந்தச் சிறுவனைப் பார்த்தால் யாரும் போக்கிரி, திருடன் என்று சொல்லமாட்டார்கள். நல்ல களைபொருந்திய முகம்; ஆனால் தொடர்ந்த பட்டினியால் வாடிப்போயிருந்தது. அழுது அழுது வீங்கிப் போயிருந்த அவன் கண்கள் இப்போது வறண்டு போயிருந்தன. தர்மவான்கள் என்று பெயரெடுத்த எத்தனையோ நபர்கள் தங்கள் தங்கள் பில்களுக்குப் பணத்தைச் செலுத்திவிட்டுப் போய்க்கொண்டிருந்தார்களே தவிர, ஒரு நபராவது, அந்தச் சிறுவனை ஏறிட்டுக் கூடப்

பார்க்கவில்லை. கடைசியில் ஏதோ ஒரு முடிவிற்கு வந்தவர் போல் ஹோட்டல் முதலாளி அந்தப் பையனைப் பார்த்து "டேய்! பத்தணாவை எடுத்துவை. இல்லாவிட்டால் இரண்டு நாள் இங்கே வேலை பார்க்கணும். வேறு சம்பளம் கொடுக்க மாட்டேன். இடையே தப்பி ஓட முயற்சித்தாயோ, முது கெலும்பு போய்விடும். என்ன சொல்லு கிறாய்?" என்றார். இந்த மாதிரி இலவச வேலைகள் வாங்குவதன் மூலமாகவே அவர் இருபதினாயிரம் ரூபாய்க்குக் கார் வாங்கியவர். இரண்டு நாள் சம்பளமான மூன்று ரூபாயில் பத்தணா போனால் இரண்டு ரூபாய் ஆறணா மிச்சம்தானே? இந்த மாதிரி சாப்பிட்டு விட்டு ஓடுபவர்களின் மூலம் அவர் நல்ல லாபம்தான் அடைந்து வந்தார். இருந்தாலும் கோபப் படுபவர் போல் பாவனை செய்தார்.

அவ் வார்த்தைகளைக் கேட்டுக் கொண்டே வந்த மாணிக்கத்திற்குக் கோபத்தினால் ரத்தம் கொதித்தது. விடுவிடென்று முதலாளி யின் மேஜையருகில் போனான். "இதோ, அவன் கொடுக்க வேண்டிய பத்தணா! அவன் எங்கள் வீட்டு பையன்! ஏதோ பசிக் கோளா றினாலே அந்தமாதிரிச் செய்துவிட்டான், உங்கள் கை வெறியையும், திமிரையும் அவ னிடம் காண்பிப்பதுதான் உங்கள் தர்மமோ? வாடா, தம்பி!" என்று ஆத்திரத்துடன் கத்திக் கொண்டே, பாக்கி ஆறணாவைக் கூட எடுத் துக் கொள்ளாமல் அந்தச் சிறுவன் கையைப் பிடித்துக் கரகர வென்று இழுத்துக்கொண்டு வெளியே வந்தான். பிரமிப்பினால் சிலை போல் நின்ற அந்தப் பையன், ஆட்டுக் குட்டி போல் மாணிக்கத்தைப் பின் தொடர்ந்தான்.

ஹோட்டல் முதலாளி திகைத்தே போனார். இம் மாதிரி எத்தனையோ கேஸ்களை அவர் பார்த்திருக்கிறார். ஆனால் ஒன்றிலாவது இப் படித் திடீரென்று அநாதரக்ஷகன் ஒருவன் முளைத்ததில்லை. மீதி ஆறணாவையும் ஹோட் டல் சிப்பந்தி ஒருவனிடம் கொடுத்து மாணிக் கத்தின் பின்னால் ஓடச் செய்தார்.

"பத்தணா கொடுக்கணும் என்பதற்காகப் பிசாசு போல் அடிச்சுட்டாங்க" என்று சொல்லியவாறே அந்தச் சிறுவனை நீலமேகத் துக்கு அறிமுகப்படுத்தினான் மாணிக்கம். நீலமேகம் வேறு திசையைப் பார்த்தவாறே, "பையா! உனக்கு எழுதப் படிக்கத் தெரி யுமா? ஏதாவது வேலை பார்க்கச் சம்மதமா?" என்று கேட்டார் வெகு இதமாக.

பையன் முகத்தில் ஆனந்தத்தின் ரேகை படர்ந்தது. "நான் மூதல் பாரம் வாசித் திருக்கிறேன், சார்! என்ன வேலை வேண்டு மானாலும் பார்க்கிறேன். பசி பொறுக்க முடி யாமல்தான் ஹோட்டலிலே இந்தத் தவறு பண்ணி விட்டேன்!" என்றான். உணர்ச்சி வேகம் அவனை மேலே பேச விடாமல் தடுத்தது.

"முதல் பாரம் பாஸ் பண்ணி யிருக்கி றாயா?" என்றார் நீலமேகம். அப்போது அவர் கண்கள் அவன் மீது பதிந்திருந்தன. அந்தக் கேள்வியில் ஓர் வித அழுத்தமும் ஒலித்தது. "மாணிக்கம்! அந்தப் பையனை யும் காரிலே ஏறச் சொல்லு. உனக்கு உத விக்கு ஒரு ஆள் வேணும் என்றாயே! இந்தப் பையனை வைத்துக் கொள்!" என்று சொல்லி விட்டு ஸீட்டில் சாய்ந்து கொண்டார். அவர் அப்படிச் சாய்ந்து கொண்டால் கார் புறப் படலாம் என்று அர்த்தம்.

கார் முன்னே போய்க் கொண்டிருந்ததே தவிர நீலமேகத்தின் சிந்தனை அதை விடப் பன்மடங்கு வேகமாக பின் நோக்கிச் சென்று கொண்டிருந்தது. மூன்று விநாடிகளில் அவர் முப்பது வருஷங்களுக்குப் பின்னால் சென்றார்.

* * *

நீலமேகத்திற்கு நினைவு தெரிந்த போது, தான் தாய் தந்தையற்ற அநாதை என்று உணர்ந்து கொண்டான். தன் தாயார் வழி யில் தூரத்து உறவினர் ஒருவர் வீட்டில் அடிமை போல் உழைத்துக் கொண்டும் ஒழிந்த நேரத்தில் பள்ளிக்கூடம் போய்க் கொண்டும் வாழ்க்கையை ஓட்டி வந்தான். சதாசிவம் என்ற அந்த உறவினரும் அவரு டைய மனைவியான பார்வதியும் நீலமேகத்தி னிடம் எவ்வளவுக் கெவ்வளவு அதிக வேலை வாங்க முடியுமோ, அவ்வளவுக் கவ்வளவு அதிக வேலை வாங்கிக் கொண்டு கூடியவரை சாப்பாட்டைக் குறைத்துப் போட்டு அவ னைப் போஷித்து வந்தார்கள். அநாதைப் பையனுக்கு அரை வயிற்றிற்காவது போடு கிறோமே என்று அந்த அம்மாள் அபரிமித மாகப் பெருமை அடித்துக் கொண்டாள்.

சிறுவன் நீலமேகம் கள்ளங்கபடமற்றவன். சதாசிவத்தினிடமும் பார்வதியிடமும் எவ் வளவோ மரியாதை வைத்திருந்தான்.



"நான் இது வரையில் கீழே விழுந்ததே இல்லீங்க! நேற்றுக் கால் சறுக்கி விழுந்து விட்டேன்!"

"அடப் பாவமே! தெரியாமலா பெரியவங்க யானைக்கும் அடி சறுக் கும் என்று சொல்லியிருக்காங்க!"

கொஞ்சம் கூட முகம் கோணாமல் அவர்கள் இட்ட வேலையைச் சிரத்தையாகச் செய்து வந்தான். இதனிடையே எப்படியோ படித்து அந்த ஊரிலுள்ள பள்ளிக்கூடத்தின் கடைசி வகுப்பான முதல் பாரத்தையும் பாஸ் செய்திருந்தான்.



பள்ளிக்கூட விடுமுறை. அவனுக்கு எப்படியோ மேற்கொண்டு படித்து எங்காவது சர்க்கார் குமாஸ்தா உத்தியோகம் பார்க்க வேண்டுமென்ற ஆசை. ஐந்து மைல்களுக்கப்பாலுள்ள பெரிய பள்ளிக்கூடத்திற்குத் தினசரி நடந்து போயாவது இரண்டாம் பாரத்தில் சேர்ந்து படிக்க வேண்டுமென்ற விருப்பத்தைச் சதாசிவத்தினிடம் சொன்னான். சதாசிவம் உற்சாகமாகப் பதில் சொல்லவில்லை. பார்வதி குறுக்கிட்டு, "நீ படித்துக் கிழித்தது போதும்!" என்று சொல்லவே, நீலமேகத்தின் ஆசை நிராசையாயிற்று.

அன்று வெள்ளிக்கிழமை. சதாசிவம் அவசர வேலையாக அயலூர் போயிருந்தார். பார்வதி காலையில் தனக்கு மாத்திரம் ஏதோ ஆகாரம் செய்து சாப்பிட்டுவிட்டு, நீலமேகத்திடம் ஒரு அண்டா நிறைய நீர் நிரப்பும்படி சொல்லிவிட்டுப் பக்கத்து வீட்டிற்குப் பேசப் போய்விட்டாள்.

அண்டாவோ பெரிய அண்டா. பசியோ அடி வயிற்றைக் கிள்ளியது. நீலமேகத்தினால் இரண்டு வாளி ஜலத்திற்கு மேல் இறைக்க முடியவில்லை. கால் கைகளெல்லாம் சோர்ந்து வந்தன, அப்படியே கிணற்றடியில் படுத்துத் தூங்கிவிட்டான்.

கண்களை விழித்துப் பார்க்கையில் மணி மூன்றுக்கு மேலாகியிருந்தது. அவசரம் அவசரமாகக் கொல்லையிலிருந்த வாழை மரத்திலிருந்து ஒரு இலையை நறுக்கிக் கொண்டு உள்ளே ஓடினான். "மாமி! ரொம்பப் பசிக்குது! சாப்பிட்டுவிட்டுத் தண்ணீர் நிரப்புகிறேனே!" என்றான் உட்கார்ந்து கொண்டு.

திரிபுரத்தை எரித்த சிவன்போல் விழித்தாள் அந்தப் பரதேவதை. "சோம்பேறிக் கழுதைக்குச் சோறு ஒன்றுதான் குறை! ராஜா மாதிரி தூங்கினால் எழுப்பி உபசாரம் பண்ணுவார்களோ? இனிமேல் சாப்பாடு ராத்திரிதான். அதுவும் அண்டா நிறையத் தண்ணீர் நிரப்பினால்தான்" என்று நிர்த்தாட்சிண்யமாகச் சொல்லிவிட்டு மறுபடியும் 'வம்பு பேசப்' போய்விட்டாள்.

நீலமேகத்திற்குத் தலையைச் சுற்றியது. சமையலறையோ பூட்டப்பட்டிருந்தது. என்ன செய்வதென்று தெரியாமல் சில விநாடிகள் விழித்தான். கடைசியில் தன் ஒரே சட்டையை மாட்டிக் கொண்டு, ஐந்து மைலுக்கு அப்பாலிருந்த நகரத்தை நோக்கிப் புறப்பட்டான். இனிமேல் இந்த வீட்டில் அடி எடுத்து வைப்பதில்லை என்ற தீர்மானம் அவன் உள்ளத்திலே நிலைத்து நின்றது.

நகரத்தை யடைந்த போது மணி ஐந்து. கால்கள் கெஞ்சின. வழியில் தென்பட்ட சிலரிடம் தன் நிலைமையைச் சொல்லிச் சில்லறை கேட்டான். ஆனால் அவர்களின் உள்ளத்தில் கருணையின் திவலைகூட இல்லை. "அங்கே போ! இங்கே போ" என்று கையைக் காட்டிவிட்டுப் போனார்கள். கண்ணய




"ஸெலூனில் க்ஷவரம் பண்ணிக் கொண்டு வெளியிலே வந்து பார்த்தால் என் ஸைக்கிளைக் காணோம். இதோடு இது இரண்டாம் தடவை. இதற்கு என்ன செய்வது......?"

"என்ன செய்வதென்ன! க்ஷவரம் பண்ணிக் கொள்வதை உடனே நிறுத்தி விடுங்கள். என் மாதிரி தாடி வளர்த்து விடுங்கள்."

மான வீடுகளாகத் தோன்றிய சில வீடுகளில் போய் மனமுருக ஏதாவது ஆகாரம் தரும்படி வேண்டினான். "கிழங்கு போலிருக்கிறாய்! போடா! ஏதாவது வேலை செய்து பிழை!" என்றனர் அந்த வீட்டுக்காரர்கள். பசியோ கண்களை மறைத்தது.

கடைத்தெரு வழியாக வந்து கொண்டிருந்தபோது ஒரு பிரும்மாண்டமான சிற்றுண்டிச்சாலை அவன் கண்களைக் கவர்ந்தது. தட்டுத் தட்டாகக் கண்ணாடி பீரோவில் அடுக்கி வைக்கப்பட்டிருந்த பக்ஷணங்கள் அவன் பசியை அதிகப்படுத்தின. சாரி சாரியாக ஜனங்கள் உள்ளே போய் வயிறு நிறையச் சாப்பிட்டு விட்டு வருவதைப் பார்த்துக் கொண்டே சில நிமிஷங்கள் நின்றான்.

'எல்லோரிடம் சில்லறை கேட்டோம். ஒருவருக்கும் கொடுக்க மனம் வரவில்லை. இந்த ஹோட்டலில் போய் வேண்டியதைச் சாப்பிட்டு விட்டு அந்த முதலாளியிடம் சொன்னால் கேட்டுக் கொள்வார் என்று தோன்றியது அவனுக்கு. விடுவிடென்று உள்ளே நுழைந்து ஓரமாக இருந்த ஒரு மேஜையில் உட்கார்ந்தான். இட்லி, தோசை என்று கொண்டு வரச் சொல்லி வயிறு நிரம்பச் சாப்பிட்டான். ஆனால் வயிறு நிரம்ப நிரம்ப அவன் மனதிலும் பயம் வளர ஆரம்பித்தது. 'காலணாவிற்குச் சாப்பிட்டு விட்டோமே!' என்று நடுங்கினான். கடையில் ஒருவரும் பார்க்காமலிருக்கும் போதே வெளியில் நழுவி விட வேண்டியது தானென்றும் தீர்மானித்தான். ஆனால் அதிர்ஷ்டம் அவன் பக்கம் இல்லை.

எப்படியோ கூட்டத்தில் வாசற்படியைத் தாண்டி வெளியே இறங்கி விட்டான். 'இனி மேல் கவலையில்லை, இரவு எங்காவது திண்ணையில் போய்ப் படுத்துத் தூங்கிவிட்டு நாளை யோசித்துக் கொள்ளலாம்' என்று இரண்டடி எடுத்து வைத்தான். இரும்புக் கரம் ஒன்று அவன் தோள்பட்டையை அழுத்தியது. அதே விநாடியில் அவன் முதுகில் உலக்கை போன்ற ஒரு கை படாரென்று அறைந்தது.

நடுநடுங்கித் திரும்பிப் பார்த்தான் நீலமேகம். எம கிங்கரன் போல் அந்த ஹோட்டல் வேலையாள் நின்று கொண்டிருந்தான். "திருட்டு ராஸ்கல்! சாப்பிட்டு விட்டுத் துட்டுக் கொடுக்காமலா ஓடுகிறாய்? வா!" என்று கரகர வென்று இழுத்துக் கொண்டு போய் நாற்காலியில் அமர்ந்திருக்கும் முதலாளியின் முன் நிறுத்தினான். நிறுத்திப் பிசாசு போல் நீலமேகத்தின் கன்னத்தில் இன்னும் ஒரு அறை ஓங்கி வைத்தான். நீலமேகம் அப்படியே சுருண்டு போய் முதலாளியின் காலடிகளில் விழுந்தான்.

ஆஞ்சநேய விலாஸ் சொந்தக்காரரான பாஸ்கர ராவ், பார்வைக்குக் கடின சித்தமுள்ளவராகக் காணப்பட்டாலும் இளகிய மனதுள்ளவர். "டேய் பிசாசு! அவன் சின்னப் பையன்டா!" என்று தம் சிப்பந்தியைக் கடிந்து கொண்டு, நீல மேகத்தைத் தாமே தூக்கி நிறுத்தினார். "தம்பி! என்னிடம் ஒரு வார்த்தை சொன்னாயானால் கையிலே ஒரு பார்சல் பொட்டலம் கூடக் கட்டிக் கொடுத்திருப்பேனே! நீ யார், தம்பி! கேடிப் பயல்கள் மாதிரித் தெரியவில்லையே!" என்று அன்பு ததும்பக் கேட்டார்.

நீலமேகத்தின் கதையைக் கேட்டதும் அவருக்குக் கண்ணில் ஜலம் வந்துவிட்டது. தன் ஹோட்டலிலேயே வேலை போட்டுக் கொடுத்தார். எட்டு வருஷகாலம் ஆஞ்சநேய விலாஸில், சாமான்கள் அறை மேற்பார்வையாளனாக இருந்தான். விலைவாசி, வியாபார நுணுக்கங்கள் எல்லாம் அவனிடம் அத்துபடியாயின.

இருபது வயது நிறைந்த நீலமேகம் வாட்டசாட்டமான ஆளானான். பாஸ்கர ராவ் அவனிடம் அபார நம்பிக்கை வைத்திருந்தார். ஆனால் சகவாச தோஷத்தினாலோ என்னவோ, அவன் மனம் களங்க மடைந்தது. 'இந்த பாஸ்கரராவ் மாத்திரம் பெரிய முதலாளி என்று பெயர் வைத்துக் கொண்டு பணம் காசில் புரளுவானேன்? நாம் மாத்திரம் மாதச் சம்பளத்தில் கிழிசல் வேஷ்டியையும் பனியனையும் போட்டுக்கொண்டு இருப்பானேன்?" என்ற எண்ணம் அவன் மனத்தில் தோன்ற ஆரம்பித்தது. கடைசியில் அவனும், அந்த ஹோட்டலில் வெகுநாளாக வேலை பார்த்துவந்த ஸ்ரீதரன் என்பவனும், ஒரு திட்டம் போட்டார்கள். அடுத்த வாரம் பாஸ்கர ராவ், அயலூர் போயிருக்கும்போது

இரும்புப் பெட்டியை உடைத்து, பணத்தை எடுத்துப் பங்கு பிரித்துக்கொண்டு, சிங்கப்பூருக்கு ஓடிவிடுவது என்று நிர்ணயித்தார்கள்.

அன்று பாஸ்கர ராவ் வெளியூருக்குப் போவதாயிருந்தார். நீலமேகத்துக்கு நிலைகொள்ளவில்லை. தன் எண்ணம் செயலாகச் சீக்கிரமே பரிணமிக்கப் போகிறது என்பதை எண்ணி எண்ணி மனதிற்குள்ளாகவே மகிழ்ந்து கொண்டிருந்தான்.

பகல் முழுவதும் எங்கெல்லாமோ சுற்றிவிட்டு வந்த பாஸ்கர ராவ், வந்ததும் வராததுமாக, "நீலமேகம்!" என்று அழைத்தார். நீலமேகம் பவ்யமாக அவரெதிரே வந்து நின்றான். "இதோ, இரும்புப் பெட்டிச் சாவி! ஜாக்கிரதை! பெட்டியில் முப்பதாயிரத்துச் சொச்சம் இருக்கிறது. நான் ஊர்போய்த் திரும்பும் வரை உன் பொறுப்புத்தான்!" என்று சொல்லிக்கொண்டே சாவிக் கொத்தை எடுத்து அவனிடம் நீட்டினார் பாஸ்கரராவ்.

நீலமேகத்திற்கு உச்சந்தலையிலிருந்து கட்டை விரல்வரை நடுங்கிற்று. 'அடடா! நம் மீது இத்தகைய நம்பிக்கை வைத்திருக்கும் மகானுபாவனையா துரோகம் பண்ண நினைத்தோம்?......மகத்தான பாவம்! இதை அவரிடமே சொல்லி மன்னிப்புக் கேட்காமற் போனால், நாம் மனிதனில்லை' என்று நினைத்து அப்படியே அவர் காலில் மரம் போல் விழுந்து விட்டான். "எஜமான்! நான் மகாபாவி! தங்கள் அன்பிற்கு அருகதையற்றவன்" என்று சொல்லி அழுதே விட்டான். அப்புறம் திணறியவாறே தன் துரோகத் திட்டத்தைப் பற்றியும் சொன்னான்.

"அட அசடு! இது மனித சுபாவம்தான். நானே ஊரிலிருந்து திரும்பியதும் உனக்குப் பதினாயிரம் ரூபாய் முதல் கொடுத்து ஒரு பலசரக்குக் கடை வைக்கச் சொல்லலாமென்றிருந்தேன். உனக்கு அந்தத் துறையில் சாமர்த்தியம் அதிகம் என்று எனக்குத் தெரியும். இப்பொழுது பதினையாயிரமாக முதல் போடப் போகிறேன்! சரிதானா? இந்தா, சாவி! முதலில் அந்த ஸ்ரீதரனுக்கு ஒரு வருஷச் சம்பளத்தைக் கொடுத்து விட்டிற்குப் போகச் சொல்! இனிமேல் நீதான் ஆஞ்சநேய விலாஸ் பொக்கிஷதார்" என்றார் பாஸ்கர ராவ். நீலமேகம் வெள்ளை மனதுள்ளவன் என்று தெரிந்து கொள்ள அவருக்கு அதிக நேரம் பிடிக்கவில்லை.

ஆறு வருஷங்கள் ஓடின. அதற்குள்ளாகவே, பதினையாயிரம் ரூபாய் முதலையும், பதினையாயிரம் லாபத்தையும் அப்படியே பாஸ்கர ராவ் கையில் கொடுத்தான் நீலமேகம். அந்த முப்பதினாயிரம் போக அவன் கையில் இருபதினாயிரம் ரூபாய் இருந்தது. அத்துடன் லக்ஷ்மி கடாக்ஷமும் இருந்தது. தொட்டதெல்லாம் பொன்னாகும் காலம். லக்ஷக்கணக்கில் அவனுடைய வியாபாரம் பெருகியது. அவன் குடும்பமும் பெருகியது. வெறும் நீலமேகம், பிரபல வியாபாரி நீலமேகமானார். ஆனால், ஒவ்வொரு வேளையும் அவர் சாப்பிட உட்கார்ந்தவுடன், இடுப்பிலிருக்கும் மணிபர்சை எடுத்துப் பிரித்துப் பார்த்துவிட்டுத்தான் சாப்பிடுவார். பணத்தை எண்ணிப் பார்ப்பதற்காக அல்ல! அதனுள் பத்திரமாய் வைக்கப்பட்டிருந்த பாஸ்கர ராவின் புகைப் படத்தைப் பார்க்கத்தான்! தாம், இவ்வளவு கௌரவமுள்ள மனிதனாக உலவ பாஸ்கர ராவ் தான் காரணம் என்று அவருக்கு நன்றாகத் தெரியும். அநாதையாகிய தம் மீது அவர் காட்டிய அபார நம்பிக்கைதான், தம் உள்ளத்தைப் புனிதப்படுத்தியது என்றும் அவருக்குத் தெரியும். எத்தனையோ குழப்பங்களிலும் வியாபார நெருக்கடிகளிலும், வேறு தொல்லைகளிலும் பாஸ்கர ராவின் படம் அவருக்குத் தெளிவு உண்டாக்கியிருக்கிறது.

* * *

கார் பங்களாவை அடைந்தது. மாணிக்கம் முதலில் இறங்கித் தன் எஜமானருக்காகக் கதவைத் திறந்தான். "மாணிக்கம்! அந்தப் பையன் இங்கேயே சாப்பிட்டுக்கொண்டு, உனக்கு உதவியாக இருப்பான். மாதம் இருபது ரூபாய் சம்பளம்" என்று சொல்லிவிட்டு உள்ளே போனார். மாணிக்கம் ஒன்றும் புரியாமல் நின்றான். காரில் வந்து கொண்டிருந்தபோது தன் எஜமானர் முப்பது வருஷத்துக்கு முந்திய கற்பனையில் சஞ்சரித்துக் கொண்டிருந்ததை அவன் கண்டானா என்ன?




நீலா ராமமூர்த்தி

LC.T.-லே மணி ஆறு இருக்கும். சத்தியவான் மதகுச் சுவரின் மேடையில் தன்னந் தனியாகக் கண்ணீர் வழிய, சித்திரப்பாவை போல் உட்கார்ந்திருந்தாள் தேவானை. அலட்சியமாய் அள்ளிச் செருகப்பட்டிருந்த அவளுடைய சுருள் சுருளான நீண்ட கூந்தலில் பாதி அவிழ்ந்து புரண்டு காற்றில் அலைந்து கொண்டிருந்தது. அவள் காலடியில் கிடந்த பூக் கூடையிலிருந்து மலர்ந்த மல்லிகைச் செண்டுகள் கம்மென்ற வாசனையை வீசிக் கொண்டிருந்தன. ஒருமுறை மல்லிகைச் சரத்தைக் கையிலெடுத்துப் பார்த்துப் பெருமூச்செறிந்த தேவானை "ஐயோ, கடவுளே! சோதனையாக ஒரு முழம் பூகூட விற்கவில்லையே. இன்றைக்குக் கையிலே காலணா கிடையாது. படுத்த படுக்கையாயிருக்கிற பாட்டியிடம் வெறுங் கையாய் எப்படிப் போகிறது! அவளுக்கு மருந்து வாங்கணுமே, என்ன செய்வேன்" என்று வாய்விட்டுப் புலம்பினாள்.

அந்த வழியாக வந்த ஒரு தம்பதிகளைப் பார்த்த தேவானை கண்ணைத் துடைத்துக் கொண்டு, "அம்மா! அம்மா! பூ வேணுமா, மல்லி, முல்லை, இருவாட்சி" என்று கூவியபடி கூடையுடன் அருகில் ஓடினாள். ஏனோ அந்த அம்மாள் வேட்டை காய் போல் வெடுக்கென்று சீறினாள்.

"வழியை விடு. பூவும் வேண்டாம், காயும் வேண்டாம்" என்று சொல்லித் தன் கணவனுக்கு முன் தள்ளி ஓடிவிட்டாள்.

தேவானையின் வாடிய மனம் இடிந்து விட்டன. சோர்ந்த முகத்துடன் வீட்டுக்குத் திரும்பலானாள். எண்ணாத எண்ணமெல்லாம் எண்ணி எண்ணிப் புண்ணாகியது அந்தப் பேதை மனம். "அத்தான் இருந்தால் இப்படியெல்லாம் ஆகுமா!" என்று நினைத்த போது அவள் இதயமே வெடித்துவிடும் போலிருந்தது. வேதனைப்படும் நெஞ்சை அழுத்திப் பிடித்துக் கொண்டாள்.

அப்பொழுது பெட்டி படுக்கையுடன் ஓடி வந்த ஒருவன் அவசர அவசரமாக அவளைக் கடந்து சென்றான். அதைக் கூடக் கவனியாத தேவானை வீட்டை நோக்கி மெதுவாக நடந்து சென்றாள்.

"ஏ, புள்ளே! கொஞ்சம் நில்லு" என்று இறைக்க இறைக்க ஓடி வந்த ஒரு கிழவன் குரல் கேட்டு அப்படியே திகைத்து நின்றாள் தேவானை.

"ஏம்மா, என்ன பூ இருக்கு!" என்று கேட்ட வண்ணம் கிழவன் கூடையை ஆராய்ந்தான்.

"மல்லி, முல்லை, இருவாட்சி எல்லாம் இருக்கு. உங்களுக்கு என்ன வேணும், தாத்தா!" என்று கேட்டாள் தேவானை. அவள் மனத்துக்குள் "இருட்டிப் போச்சே பாட்டி திட்டுவாளே" என்ற பயம் சூழ்ந்து கொண்டிருந்தது.

எதிர்பாராத விதமாக வந்த இந்த வியாபாரத்தையும் விட அவளுக்கு மனமில்லை.

"எனக்கு வேண்டாம். எங்க யஜமானிக்குத் தான் வேணும்" என்று சிரித்தான் கிழவன்.

"சரிதான் போய்யா" என்று கோபத்துடன் கசர்ந்தாள் தேவானை.

"இந்தா அம்மா, பூக்காரி! நாளைக்கு யஜமான ரோட குழந்தைக்கு ஆண்டு நிறைவு. ஒரு கூடை பூ வேணும் என்று அம்மா சொன்னாங்க. நீ வராட்டி போனால் நான் வேறு யாரிடமாவது சொல்லிக்கிறேன்" என்றான் கிழவன்.

ஒரு நிமிஷம் யோசித்த தேவானை "வீடு ரொம்ப தூரம் இருக்குமோ, தாத்தா" என்றாள்.

"இதோ கூப்பிடு தூரந்தான்" என்று கூறி வேகமாய் நடந்தான் கிழவன். அவனைத் தொடர்ந்து தேவானையும் நடந்தாள்.

"இருட்டு வேளையில் சின்னஞ் சிறுசான நீ இப்படித் தனியாக வரலாமா!" என்றான் கிழவன்.

"என்ன செய்கிறது தாத்தா. எங்க பாட்டி படுத்த படுக்கையா யிருக்காங்க. மருந்து வாங்கக் கூடப் பணம் இல்லை" என்றாள் தேவானை. அவள் குரலில் எல்லையற்ற வேதனை தொனித்தது.



புது மாப்பிள்ளை:—உன் அப்பா அம்மா எல்லாரும் என்னைப் பற்றி என்ன சொல்லுகிறார்கள்? அவர்களிடமெல்லாம் நான் அழகழகான கவிதை புனைவதைப் பற்றிச் சொல்லியிருக்கிறாயோ?

மனைவி:—இல்லை! நீங்கள் பொடி போடுவது, சிகரெட் பிடிப்பது இதைப் பற்றியெல்லாம் சொன்னேன்! தங்களிடம் உள்ள எல்லா கெட்ட பழக்கங்களையும் பற்றி ஒரே மடியாகச் சொல்ல வேண்டாம் என்று பார்த்தேன்!

"அடாடா! அப்படியா சேதி! வீட்டிலே ஆண் பிள்ளைகளே கிடையாதா! உனக்கு அப்பா அம்மா யாரும் இல்லையா! காலம் இருக்கிற இருப்பிலே ஒரு அழகான பெண் அமாவாசையும் அதுவுமா தனியே வரலாமா" என்று கேட்டான் கிழவன் பச்சாத்தாபத்துடன்.

"தாத்தா! ஆண் பிள்ளைங்க இருந்தால் இப்படி அலைய வேணும் என்று எனக்கு விதியா! நான் ரொம்ப துரதிருஷ்டசாலி!" என்றாள் தேவானை.

"ஐயோ, பாவம்!" என்றார் கிழவர்.

"என் கதை ரொம்பப் பெரிசு தாத்தா" என்று சொல்லி ஒரு பெருமூச்சு விட்டாள் தேவானை.

"அதைத்தான் சொல்லேன், சற்றுக் கேட்போம்" என்றார் கிழவர்.

தேவானை தன் கதையை ஆரம்பித்தாள்.

"என் பாட்டிக்கு ஒரு பெண்ணும் ஒரு பிள்ளையும் இருந்தாங்க. கூடியவரை நல்ல நிலைமையில் தான் இருந்தாங்க. என் அத்தை புருஷனுக்கு ரொம்ப நாளாகவே சிங்கப்பூருக்குப் போய்ப் பணம் சம்பாதிக்கணும் என்ற ஆசை உண்டு. அத்தான் பிறந்த பிறகு அந்த ஆசை அதிகமானதுடன், என் அப்பாவையும் அந்த ஆசை தொத்து நோய் போலப் பிடித்துக் கொண்டது.

"அத்தானுக்கு ஐந்து வயதாயிருக்கும் போது பாட்டி எவ்வளவு மன்றாடியும் கேட்காமல் இருவரும் சிங்கப்பூருக்குப் போய் விட்டனர். கொஞ்ச நாள் வரை கடிதமும், பணமும், வந்து கொண்டிருந்தது. பிறகு நின்றுவிட்டது. பூரண கர்ப்பிணியாக இருந்த அத்தை, புருஷனைப் பிரிந்த வேதனையில் குழந்தையுடன் பிரசவ அறையிலேயே இறந்து போனாள். என் அம்மாவோ நோயாளியானாள். எங்களுக்காக மனத்தைத் தேற்றிக் கொண்ட பாட்டி தன் பூர்வீகச் சொத்தான ஒரு சிறு தோட்டத்தில் காய் கறிகளும், புஷ்பச் செடிகளும், பயிரிட்டு அங்கேயே ஒரு குடிசையும் போட்டுக் கொண்டு எங்களைக் காப்பாற்றினாள். எருமை மாடுகளும் பசு மாடுகளும், வைத்துக் கொண்டாள். பால், தயிர், வெண்ணெ, கறிகாய், புஷ்பம், முதலிய வியாபாரங்களின் மூலம் என்னையும் என் அத்தானையும் படிக்க வைத்தாள்.

"அம்மா வீட்டிலிருந்தபடியே இட்லி, தோசை முதலியவைகளைச் செய்து விற்று வந்தாள். இந்த சமயத்தில் சிங்கப்பூர் போயிருந்தவர்களைப் பற்றிப் பல கெட்ட சேதி எங்கள் காதுக்கு எட்டியது. என் அத்தை புருஷன் இறந்து விட்டதாகவும், என் அப்பா வேறு யாரையோ இரண்டாந்தாரமாய்க் கல்யாணம் செய்து கொண்டதாகவும், யார் மூலமாகவோ ஊரெல்லாம் செய்தி பரவியது.

"இதைக்கேட்ட அம்மா வெய்யிலில் விழுந்த புழுமாதிரி துடித்தாள். கொஞ்ச நாளைக்குப் பிறகு இன்னொரு செய்தி வந்தது. அப்பாவின் இரண்டாவது மனைவிக்கு ஒரு பிள்ளையும் பிறந்து வளருகிறது என்ற வதந்தி அம்மாவின் உயிரையே குடித்து விட்டது. பிறகு என் அப்பாவைப் பற்றிய தகவலே தெரியவில்லை.

"பத்தாவது வரையில் அத்தான் படித்து முதல் வகுப்பில் தேறியவுடன் பாட்டி எங்கள் கல்யாணப் பேச்சை ஆரம்பித்தாள்.

"அத்தான் பிடிவாதமாக 'பாட்டி, நான் சிங்கப்பூர் போகிறேன்! நன்றாய்ச் சம்பாதித்துக் கொண்டு அப்பாவையும் மாமாவையும் கண்டு பிடித்து அழைத்துக்கொண்டு வருகிறேன். அப்புறம்தான் கல்யாணம்' என்றார்.

"பாட்டிக்கு இடி விழுந்தது போலாய் விட்டது. அன்றுதான் பாட்டி வாய்விட்டு அழுதாள்.

"'வேண்டாண்டா, தம்பி! போனவங்களே திரும்பவில்லை. நீயும் போனால் என் கதி என்ன ஆவது!' என்று மன்றாடினாள்.

"'தைரியமாயிரு பாட்டி. மாதா மாதம் நிறைய பணம் அனுப்புகிறேன். ஆறே மாதத்தில் வெற்றியுடன் வீடு திரும்புகிறேன்' என்று சொல்லி விட்டுப் போய்விட்டார்.

"ஒரு மாதத்திற்குப் பிறகு ஐம்பது ரூபாய் பணமும், கடிதமும் வந்தது. சிங்கப்பூர் பஞ்சாலையில் மாதம் நூற்று இருபது ரூபாய் சம்பளத்தில் இருப்பதாகவும், கூடிய சீக்கிரம் நல்ல சேதியோடு வந்து விடுவதாகவும் எழுதினார். பாட்டிக்கு நம்பிக்கையில்லை. அளவு கடந்த துக்கத்திலாழ்ந்து போன அவள் ஒரே துணையான என் அத்தானையும் பிரிந்ததால் நோயாளியானாள். அடிக்கடி கடிதமும், பணமும் வந்தாலும், பாட்டியின் பயம் அதிகரித்துக் கொண்டே வந்தது.

'எதிர்பாராத வகையில் எங்கள் வீட்டு மாடுகளில் இரண்டு இறந்து விட்டது. போன மாதம் பெய்த அடை மழையில் செடி கொடிகளெல்லாம் பாழாகி விட்டன. அத்தானிடமிருந்தும் கடிதமோ பணமோ வரவில்லை. பாட்டியின் உடம்பும் அதிகமாகி விட்டது. போதாக் குறைக்கு எவனோ ஆறுமுகம் என்ற வெளியூர்க்காரன் ஒருவன் வந்து எங்களுக்குப் போட்டியாக பூ வியாபாரம் செய்யவானான். இதோ பாருங்க தாத்தா ஒரு முழம் பூகூட விற்கவில்லை. அத்தான் ஊருக்குப் போய் ஒரு வருஷமாய் விட்டது. வருவார் வருவார் என்று எதிர்பார்த்து எனக்கு அலுத்தே போய் விட்டது. நேற்று பாட்டியை வந்து பார்த்த டாக்டர் நல்ல மருந்து வாங்கிக் கொடுக்காவிட்டால் பாட்டி பரலோகம் போய்விடுவாள் என்று கூறி ஐந்தாறு மருந்து எழுதிக் கொடுத்தார். நாலைந்து ரூபாய்களுக்கு எங்கே போவது!

"'மருந்து வேண்டாம் தேவானை' என்று பாட்டி பிடிவாதம் பிடிக்கிறாள்" என்று தன் கதையைச் சொல்லி முடித்த தேவானை, பின்னாலே

"சல சல"வென்ற ஓசையைக் கேட்டுத் திடுக்கிட்டு "இது என்ன தாத்தா!" என்றாள்.

சுற்றும் முற்றும் திரும்பிப் பார்த்த கிழவன் "ஒன்றுமில்லேம்மா. இதோ வீடு வந்துவிட்டது. போ உள்ளே. அம்மா இருப்பாங்க" என்று ஒரு சிறு ஓட்டு வீட்டைக் காட்டினான்.

தயங்கித் தயங்கி நின்று விட்டுப் பிறகு உள்ளே நுழைந்தாள் தேவானை.

"தேவானை, வா! வந்து உட்காரு" என்று சிரித்தபடியே ஒரு அம்மாள் வந்தாள்.

தேவானையும் உட்கார்ந்தாள்.

"உங்களுக்கு எவ்வளவு பூ வேணும், அம்மா! சீக்கிரம் சொல்லுங்கள்" என்றாள்.

அந்த அம்மாள் முகத்தில் சந்தோஷத்தை வரவழைத்துக் கொண்டு, "எனக்கு ஒரு கல்யாணத்துக்கு வேண்டிய பூ வேணும். அத்துடன் உன்னுடைய கஷ்டங்களும் தொலைந்துவிட வேணும்" என்றாள் சிரித்துக் கொண்டே.

"என்ன அம்மா! நீங்கள் சொல்லுவது எனக்கு ஒன்றுமே புரியவில்லை. அந்தக் கிழவர் ஏதோ ஆண்டு நிறைவுக் கல்யாண பூ வேண்டும் என்று சொன்னார். நீங்கள் கல்யாணம் என்று சொல்லுகிறீர்களே!" என்றாள் தேவானை.

"ஆமாம்! கல்யாணமே தான். நீ சரி என்று சொல்லி விட்டால் கல்யாணம்தான்" என்று சொல்லி மெதுவாகப் பேச்சை வேறு விதமாகத் திருப்ப ஆரம்பித்து விட்டாள் அந்த அம்மாள்.

"இதோ பாரு, தேவானை! புதுசாகப் பூக்கடை வைத்திருக்கிறாரே ஆறுமுகம் அவரைப் பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறாயா! அவருக்குச் சிங்கப்பூரில் பெரிய பஞ்சாலை இருக்கிறதாம். லக்ஷம் லக்ஷமா சொத்து இருக்கிறதாம். அவர் ஆலையிலே யாரோ சிங்காரம் என்று ஒருத்தர் வேலை செய்கிறாராம். அவரிடம்தான் உன்னுடைய படத்தைப் பார்த்தாராம். அந்தப் படத்தைப் பார்த்தவுடனேயே அவருக்கு உன்மீது ஏதோ ஒரு பாசம் ஏற்பட்டு விட்டதாம். அவர் உடனே இந்த ஊருக்கு வந்தாராம். உன்னுடைய கவனத்தைக் கவருவதற்காகத்தான் அவரும் பூக்கடை வைத்தாராம். குறைந்த விலைக்குப் பூக்களை விற்றாராம். அப்படியாவது நீ வந்து 'ஏன் இப்படி என் பிழைப்பைக் கெடுக்கிறே! என்று கேட்பாய்' என்று நினைத்தாராம். நீயோ அதை யெல்லாம் ஒன்றையும் லட்சியம் செய்யாமல் இருந்து விட்டாயாம். அதனாலேயே அவருக்கு உன் மீது இன்னும் விருப்பம் அதிகமாகி விட்டதாம். எப்படியாவது நீ அவரைக் கல்யாணம் பண்ணிக்கொள்ள சம்மதித்து விட்டால் உன்னை ராஜாத்தி மாதிரி வைத்துக் கொள்கிறேன் என்று சொல்லுகிறார். அதற்காகத்தான் அவரிடம் வேலைக்கு இருக்கும் கிழவர் என் வீட்டுக்கு உன்னை அழைத்துக் கொண்டு வந்திருக்கிறார். ஆறுமுகம் கூட என் வீட்டிலேதான் சாப்பிட்டுக் கொண்டிருக்கிறார். மனிதர் ரொம்ப நல்லவர்" என்று சொன்னாள் அந்த அம்மாள்.

அதே சமயத்தில் வாசற் கதவைத் திறந்து கொண்டு யாரோ வருவது போலிருந்தது. சிரித்த முகத்துடன் சிங்கப்பூர் ஆறுமுகம்அங்கே வந்தான்.

அவனைப் பார்த்தவுடன் "ஐயோ! என்னைக் காப்பாற்ற யாருமில்லையா! பாவி கிழவன் மோசம் செய்துவிட்டானே!" என்று கத்தினாள் தேவானை.

"ஆறுமுகம்! தேவானை உன் தங்கை. என் தந்தையின் முதல் மனைவியின் மகள்" என்று சொல்லிக்கொண்டே ஒரு இளம் வாலிபன் அங்கு தோன்றினான்.

அவனைப் பார்த்தவுடன் ஆறுமுகமும் தேவானையும் ஒரு கணம் திடுக்கிட்டனர். அடுத்த கணம் "ஆ! சிங்காரம் நீயா" என்று ஆச்சரியத்துடன் கூவினான் ஆறுமுகம்.

சிங்காரத்தை உற்றுப் பார்த்த தேவானை, "அத்தான்! நீங்களா! ஐயோ இந்தப் பாவியிடமிருந்து என்னைக் காப்பாற்றுங்களேன்" என்று கத்தியபடி மயங்கி அவன்மேல் சாய்ந்தாள்.

ஒன்றும் புரியாமல் விழித்த ஆறுமுகம் "நீ எப்பொழுது வந்தாய், சிங்காரம்! இவள் என் தங்கையா நிஜமாகவா சொல்லுகிறாய்" என்றான்.

தன் மடிமீது மயங்கிக் கிடந்த தேவானையை அங்கிருந்த கயிற்றுக் கட்டிலில் கிடத்தினான் சிங்காரம்.

பிறகு சிங்காரம் மேலே தொடர்ந்தான். 'சத்தியமாக தேவானை உன் தங்கை. முதல் முதலாக சிங்கப்பூர் பஞ்சாலையில் உன்னைப் பார்த்தபோதே தேவானையின் ஜாடை உனக்கிருப்பதைக் கண்டு திகைத்தேன். உன் தகப்பனார்தான் பஞ்சாலையின் முதலாளி. நீ மானேஜர் என்று எனக்குத் தெரிக்கும் உனக்கும் எனக்குமுள்ள அந்தஸ்து மலைக்





"ஆபீஸ் வேலை சம்பந்தமான சகலவிதக் கணக்கு வழக்குகளும் இந்தப் புத்தகத்தில் அடங்கி யிருக்கின்றன. உங்களிடம் இந்தப் புத்தகம் ஒன்று இருந்தால் பாதி வேலை குறைந்து விடும்!"

"அப்படியானால் அந்தப் புஸ்தகத்தில் எனக்கு இரண்டு பிரதிகள் உடனே கொடுங்கள்!"

கும் மடுவுக்கும் என்றிருந்ததால் உன்னுடன் மனம் விட்டுப் பேசப் பயந்தேன். பிறகு நம் உறவை எண்ணி உன்னிடம் பழகினேன். என்னுடன் பிறந்தவன் போலவே உன்னை நினைத்தேன். தேவானையைப் பற்றிப் புகழ்ந்ததுடன் அவள் படத்தையும் காட்டி உன் நல்ல மனதைக் கெடுத்தேன். கடைசியாக அன்று உன் தகப்பனார் படத்தைக் காட்டி, 'சிங்கப்பூருக்குச் சற்று தூரத்திலுள்ள ஆஸ்பத்திரி ஒன்றில் முடக்கு வாதத்திற்காக சிகிச்சை பெற்று வருகிறார்' என்று நீ சொன்னதும் என் மனதில் கொஞ்ச நஞ்சமிருந்த சந்தேகமும் தீர்ந்து விட்டது. இருந்தாலும் ஒரு தடவை அவரை நேரில் பார்த்துப் பேசித் தெரிந்து கொண்ட பிறகு உன்னிடம் உண்மையைச் சொல்லுவோமென்ற எண்ணத்துடன் உன் தகப்பனாரைப் பார்க்கச் சென்றேன்.

"அவரைப் பார்த்தபோது என் மனம் துடித்தது. 'மாமா!' என்று அழுது புலம்பினேன். வெகு நேரத்திற்குப் பிறகு என்னை அடையாளம் கண்டு கொண்ட மாமா விக்கி விக்கி யழுதார்.

"'சிங்காரம்! நான் ஒரு துரோகி. பெற்ற தாயைப் புறக்கணித்தேன். கட்டிய மனைவியைக் கதற விட்டேன். கண்மணிகளைப் போன்ற குழந்தைகளான உங்களையும் மறந்து பண ஆசையால் பஞ்சாலை முதலாளியின் மகளை மணந்தேன். என்னைத் திருத்த முயன்ற உன் தகப்பனாரை வீட்டை விட்டுத் துரத்தினேன். ஆறுமுகம் பிறப்பதற்கு முன்பே என் மாமனார் இறந்து விட்டார். திரண்ட சொத்துகளுக்கு அதிகாரியாகியும் என் மனம் நிம்மதியடையவில்லை. 'ஆசை அறுபது நாள் மோகம் முப்பது நாள்' என்பது போல் எனக்கு வாழ்க்கை புளித்து விட்டது. சதா ஊர் நினைவு வருத்தியது. கடிதம் எழுதவோ, பணம் அனுப்பி உதவவோ, மனம் துணியவில்லை. நாலு வருஷ வறண்ட வாழ்க்கையுடன் ஆறுமுகத்தையும் என்னையும் கைவிட்டுச் சென்றாள் அந்தப் பேதை. ஆறுமுகத்துடன் ஒரு தடவை ஊருக்கு வந்தேன். ஸ்டேஷனிலேயே உன் தாய் இறந்துவிட்ட செய்தி கிடைத்தது. குற்றவாளி போல் வீட்டுக்குச் செல்லாமலேயே மறு ரயிலில் ஏறிச் சிங்கப்பூர் வந்து சேர்ந்தேன்.

"மூன்று வருஷத்துக்கு முன் வரை ஆலையை நானே நிர்வகித்தேன். திடீரென்று முடக்கு வாதம் வந்து நடமாட முடியாமல் போகவே ஆறுமுகத்திடம் ஆலையின் பொறுப்பை ஒப்புவித்தேன். நாளுக்கு நாள் வியாதி அதிகமானதால் ஆஸ்பத்திரிக்கு வந்தேன். என் பாப பலனை அனுபவித்தேன். இதோ முடிவு காலம் நெருங்கி விட்டது. தம்பி சிங்காரம்! எனக்கு நரகத்தில்கூட இடமிருக்காது. ஆனால் ஆறுமுகம் ஒரு பாவமும் அறியாதவன். அவனை நீதான் காப்பாற்றவேணும். அம்மாவிடம் என்னை மன்னிக்கும்படியும், ஆறுமுகத்தை ஏற்றுக் கொள்ளும்படியும், சொல். தேவானையை நீயே கல்யாணம் செய்து கொள்' என்றார்.

"அவரைத் தேற்றி விட்டு வீட்டுக்கு வந்த நான் உன்னைக் காணாமல் திகைத்தேன். மறுநாள் விடியற்காலை கண்விழித்தபோதே 'பஞ்சாலை முதலாளி இறந்து விட்டார்' என்ற செய்தி காதில் விழுந்தது. மேலே ஆகவேண்டிய காரியங்களை முடித்து விட்டுச் சென்னைக்குக் கப்பலேறினேன். ஊருக்கு வந்தேன். 'தேவானை! தேவானை!' என்று அழைத்துக்கொண்டே வீட்டுக்குள் ஓடினேன். என்னைப் பார்த்த பாட்டி ஆனந்தக் கண்ணீர் சொரிந்தாள். 'பூ விற்கப்போன தேவானை இன்னும் வீடு வந்து சேரவில்லை' என்று அறிந்து பரபரப்புடன் வந்த வழியே வந்தேன்.

"ஒரு கிழவர் மூலமாக விஷயத்தைத் தெரிந்து கொண்டு அவர் உதவியுடன் இந்த வீட்டுக்குள் நுழைந்தேன். உன்னைப் பார்த்த பிறகு என்னால் சும்மாயிருக்க முடியவில்லை. ஆறுமுகம், இவ்வளவு நாளுக்குப் பிறகு கடவுளருளால் நாம் ஒன்று சேர்ந்தோம். வா போகலாம் வீட்டுக்கு. பாட்டி நமக்காகக் காத்திருப்பாள்" என்றான் சிங்காரம்.

சற்று முன்பே மயக்கம் தெளிந்த தேவானை சிங்காரம் கூறியதை யெல்லாம் கேட்டாள். "ஐயோ, அப்பா! எங்க முகத்திலே விழித்தால்கூட பாவம் என்று நினைத்தா போய்விட்டீங்க!" என்று அலறினாள். விம்மி விம்மி அழுதாள்.

அதுவரை பிரமை பிடித்தாற்போல் நின்ற ஆறுமுகம் "சிங்காரம்! அப்பா இறந்து போயிட்டாரா! ஐயோ! அப்பா!" என்று கதறினான்.

கொஞ்ச நேரத்துக்குப் பிறகு "தேவானை! என் அருமைத் தங்கையே! தெரியாமல் செய்த என் பிழையை மன்னித்து விடு. சிங்காரம்! நான் உன் வீட்டுக்கு வரமாட்டேன். உன் பாட்டியின் முகத்திலும், ஊரார் முகத்திலும், விழிக்க எனக்கு யோக்கியதையே இல்லை. நான் இப்படியே சிங்கப்பூர் போகிறேன். இங்கே நீ ஒரு நல்ல தொழிலை நடத்து. உனக்கு வேண்டிய பணம் அனுப்புகிறேன். நாம் மறுபடியும் ஒன்று சேரும் காலம் வரும்" என்றான் ஆறுமுகம். அவன் குரலில் அளவிட முடியாத சோகம் தொனித்தது.

"முடியாது அண்ணா! நீ வராவிட்டால் நானும் போகமாட்டேன்" என்று விம்மினாள் தேவானை.

"ஆறுமுகம் நீ வராவிட்டால் எனக்கு மட்டும் இந்த ஊரில் என்ன வேலை!" என்றான் சிங்காரம்.

இந்தக் காட்சிகளை யெல்லாம் பொறுமையுடன் பார்த்துக் கொண்டிருந்த அந்த வீட்டுக்கார அம்மாள் "ஆறுமுகம்! நீ அப்படிச் சொல்லக் கூடாது! உன் தங்கையின் கலியாணத்தை நடத்தி வைத்து விட்டுத்தான் போகவேணும்" என்றாள்.

* * *

ஒரு நல்ல நாளில் தேவானைக்கும் சிங்காரத்துக்கும் மிகச் சிறப்பாகத் திருமணம் நடந்தது. இதுவரையில் அந்தப் பக்கத்தில் யாருமே நடத்தாத முறையில் தேவானையின் கல்யாணத்தை நடத்திவைத்தான் சிங்கப்பூர் ஆறுமுகம். ஊரெல்லாம் சிங்கப்பூர் ஆறுமுகத்தின் பெருந் தன்மையையும் அவனுடைய சகோதரியின்மேல் அவனுக்கு உள்ள அன்பையும் பற்றித்தான் வாய் ஓயாமல் பேசிக்கொண்டார்கள்.

---

# பிராயச்சித்தம்

## கோமதி சுப்ரமணியம்

**கா**மாட்சி ஆஸ்பத்திரியிலிருந்து வந்து வாரம் ஒன்று ஓடிவிட்டது. இன்னமும் படுக்கையிலேயே தான் எல்லா வசதிகளும் நடந்து கொண்டிருந்தன. யார் செய்த தவப்பயனோ பிழைத்தெழுந்து வந்து விட்டாள். ஆனாலும் அவள் சிந்தனை ஆஸ்பத்திரி வாழ்க்கையில் அவள் அனுபவித்த நரக வேதனையை எண்ணிப் பார்த்துக் கொள்ளுவதுண்டு. பிற மனிதர்கள் தன்னை நெருங்க அஞ்சியதையும், பெற்ற குழந்தையைக் கூட அருகே வர விடாமற் தடுத்ததும், அவள் நெஞ்சைவிட்டு அகல முடியுமா? இந்நோய் எங்கிருந்து வந்தது? எதற்காகத் தன்னைத் தேடி வந்தது? இந்தக் கேள்விக்கு எளிதில் விடை கிடைக்குமா என்ன? பணம் இருப்பவர்கள், இல்லாதவர்கள் என்கிற பேதம் வியாதி அறிந்திருக்கிறதா? இல்லையே. அறியும் சக்தி வியாதிக்கு இருக்குமானால், ஏழையான காமாட்சியைத் தேடி அந்தப் பணக்கார வியாதி வரத் துணியாதே!

அவள் பட்ட அவஸ்தையை அவள் அனுபவித்த வேதனையை எளிதில் மறந்துவிட முடியுமா? இம்முடிவிலா நினைவில் தன்னை மறந்து நினைத்திருந்த சமயம் வாசலில் கார் வந்து நிற்கும் சத்தம் கேட்டது.

அக்காள் ராஜம் காரிலிருந்து இறங்கி வருவதைக் கண்டதும், ஆச்சரியமும் அதைத் தொடர்ந்து பீதியும் பின்னித் தொடர்ந்தன.

ராஜம் எதற்காக இங்கே வருகிறாள்? பிழைத்து விட்டாளே என்ற ஆத்திரத்தைக் கொட்டித்தீர்த்துவிட்டுப் போகவா? அல்லது ஏன் பிழைத்தாய் என்று கேட்டுத் தண்டனை விதிக்கவா? எண்ணக் கயிறு ஊசலாடியது. ராஜத்தின் பணம் நல்லது செய்யாவிட்டாலும் இம்மாதிரி விஷயங்களை அஞ்சாமல் அதுவும் அவசரமாகச் செய்து முடிக்கும்.

இனி அடுத்த நிமிஷம் நடக்கப்போவதென்னவென்றே அறிய முடியாமல் திகைத்து விட்டாள் காமு. வந்தவள் தங்கையின் படுக்கையை நெருங்கி வந்தவள் ஏனோ அவளையும் அறியாமல் கண்ணீரை ஆற்று வெள்ளமாய்ப் பெருக்கினாள். யார் அழுகிறது? ராஜமா? தன் அக்காள் ராஜம்தான் அழுகிறாளா? ஆம், அக்காள் ராஜம்தான் மாலை மாலையாகக் கண்ணீரை வடித்துக் கொண்டிருந்தாள்.

ஏன் இந்த மாறுதல்? எப்படி வந்தது, இந்த மனமாற்றம்? சந்தேகப் பொறியில் சுடர்விட்டது காமுவின் உள்ளம். 'அக்கா!' என்ற வார்த்தைகள் உணர்ச்சிப் பரவசத்தில் அவள் இதயத்திலிருந்து வெளியே புறப்பட்டன.

'காமு!' என்றழைத்த ராஜம் மேலே பேச முடியாமல் விக்கினாள். காணாத்தைக் கண்ட காமு தன்னை மறந்தாள். நாலு மாதங்களுக்கு முன் நடந்த சம்பவங்கள் அவள் மனத்தில் சுழன்று புரண்டு வந்தன.

* * *

**வி**யாதியின் சின்னம் என்ன என்பதை அறிய முடியாமல் பிறந்த வீட்டுக்கு வந்திருந்தாள் காமு. அவள் நினைத்தபடி பல தினம் மட்டும் இருந்தால் தாயார் வீட்டுப் போஷாக்கில் உடம்பு தேறியிருக்கும். தன் சக்திக்கும் மீறிச் செலவு செய்து பாலும் பழமுமாக வாங்கிக் கொடுத்தாள் தாயார். காமுவின் உடலைத் தேற்ற எவ்வளவோ முயன்றும் வியாதி உள்ளூர அரித்துக் கொண்டிருந்தது. நாளுக்கு நாள் உடம்பு தேய்ந்து போனதோடு ஆகாரமும் வெறுத்து வருவதைக் கண்டாள். இனி டாக்டரிடம் காண்பிக்காமல் முடியாது என்கிற யோசனைக்கு வந்தார்கள். டாக்டரிடம் வைத்தியம் செய்வதென்றால் ஏராளமான பணம் வேண்டும். தாயாரிடமோ மகளிடமோ பணம் இல்லாத நிலையில் காமாட்சி போட்டிருந்த ஒரே ஒரு தங்க வளையலையும் விற்று வைத்தியம் செய்வதெனத் தீர்மானித்திருந்தாள்.

இந்த நிலையில் ராஜத்திடம் இருந்து கடிதம் வந்தது தாயாருக்கு. ராஜத்துக்கு உடல் நலமில்லை யென்றும், உதவிக்கு அம்மா உடனே புறப்பட்டு வரவேண்டு மென்றும் கடிதம் வந்திருந்தது. கடிதத்தைக் கண்டு திடுக்கிட்டாள் தாயார். ஒரு பெண்ணுக்கு வைத்தியம் செய்ய ஆரம்பிக்கும் நிலையில் மற்றொரு பெண்ணுக்கு எப்படிப் போய் உதவி செய்ய முடியும்? குழந்தைகளை வைத்துக்கொண்டு ராஜம் எவ்வாறு கஷ்டப்படுகிறாளோ என்று பெற்ற மனம் துடித்துக் கொண்டிருந்தது. தாயாருக்கு ஒரு யோசனை. ஒரே கல்லில் இரு மாங்காய். நோயுற்ற காமுவைத் தன்னோடு அழைத்துப் போய் விட்டால் ராஜத்துக்கு நடக்கும் வைத்திய உதவிகள் காமுவுக்கும் நடக்கலாம். காமுவையும் பார்க்கும்படி தானும் கேட்டுக் கொள்ளலாம் என்ற நப்பாசை. இந்த உத்தேசத்தின் பேரில் இருவரும் ரயிலேறினர்.

ஒரே தாயின் வயிற்றில் பிறந்த பிள்ளைகள்தான். ஒருத்தி செல்வக் கடலில் நீந்துகிறாள். மற்றொருத்தி வறுமைக் கடலிலே தத்தளிக்கிறாள். இரு பெண்களையும் கட்டிக் கொடுத்த காலத்திலே ஒரே விதமாகத்தான் சீர்வகைகள் செய்யப் பட்டன. ஒரே மதிப்புள்ள நகை நட்டுகள்தான் போடப்பட்டன. இரண்டு மாப்பிள்ளைகளுக்கும் ஏறக்குறைய ஒரே அளவான வருமானந்தான் வந்துகொண்டிருந்தது. அதிர்ஷ்டம் ராஜத்தின் பக்கம் சாய்ந்தது. கிருஷ்ணன் சீக்கிரத்திலேயே தான் வேலை பார்த்த கம்பெனிக்கு அதிபதியானான். கிருஷ்ணனைச் செல்வம் வந்தடைந்தும், கர்வம், அகங்காரம் முதலான பணத்துக்கு வேண்டிய துர்க்குணங்கள் வந்து அடையவில்லை. முன் போலவே மனிதர்களை மனிதர்களாகவே எண்ணினான். அன்புடனும் ஆதர



வுடனும் தன்னைத் தேடி வருபவர்களுக்கு உதவி செய்தான். ராஜத்தின் தாயாருக்கு வேண்டிய உதவிகளைச் செய்து வந்தான். காமாட்சியின் குடும்பம் நசித்துப் போகாமல் தலை தூக்கி நின்ற காரணம் கிருஷ்ணனின் அன்பும் ஆதரவுந்தான். காமாட்சியின் வறுமை தெளிய அடிக்கடி உதவி செய்ய நினைப்பான். ஆனால் மானஸ்தனான காமுவின் புருஷன் பாலு அவ்வுதவியை ஏற்றுக் கொள்ள மறுத்து விடுவான்.

ராஜம் இதற்கு நேர்மாறானவள். தன் கணவன் எதற்காக பிறரைக் கவனித்துக்கொண்டு இருக்க வேண்டும். அவர்கள் வாழ்ந்தாலென்ன? தாழ்ந்தால் என்ன? மற்றவரைப் பற்றி இவருக்கேன் கவலை என்று நினைப்பாள்.

*　　　*　　　*

டாக்டர் ராகவன் காமுவைப் பார்த்த பார்வையிலே உதட்டைப் பிதுக்கி விட்டார். போகும் போது பயங்கரமான அந்தச் சேதியையும் ராஜத்திடம் சொல்லிச் சென்றார்.

"உங்கள் தங்கையைப் பிடித்திருக்கும் வியாதி சாதாரணமானதல்ல. 'காசம்' என்று சொல்லப்படும் பயங்கர வியாதி. இது எப்படியோ பிடித்து விட்டது. அது அவளோடு நிற்கட்டும். இங்கிருந்து கொண்டு எல்லோருக்கும் பரவவிடக் கூடாது' — என்றெல்லாம் டாக்டர் சொன்னது அம்மா உனக்குத் தெரிந்த காரியமே. மேலே நான் சொல்ல வேண்டியதில்லை" என்று தாயாரிடம் கூறிவிட்டாள் ராஜம்.

இதைக் கேட்ட பெற்ற தாயின் மனம் துடியாய்த் துடித்தது. காமுவுக்குக் காசமா? அவளால் நம்பவே முடியவில்லை. அவள் தலை சுற்றியது.

ராஜம் கூறிவிட்டாள். முடிவாகக் கூறிவிட்டாள். அதன் அர்த்தமென்ன? காமுவுக்கு இனி இந்த வீட்டில் இடமில்லை. வியாதியைக் குணப்படுத்திக் கொண்டு போகலாமென்பதில் பேரிடி விழுந்து விட்டது. இனிமேல் நடக்க வேண்டியதென்ன?

யோசித்தாள்; யோசித்து யோசித்துப் பார்த்தாள். காமு எப்படியும் இவ்விடத்தை விட்டுப் போக வேண்டியவள். அதுவும் அதி சீக்கிரமாய்ப் போக வேண்டும்.

காமு இதைக் கேள்விப் பட்டால் அவள் மனம் என்ன பாடு படும். தன்னைத் தீராத வியாதி பிடித்துப் பிறர் வெறுக்கும் நிலைக்கு மாற்றி விட்டது என்பது அறிந்தால் எப்படித் துடி துடித்துப் போவாள். நினைத்துப் பார்க்கவே அஞ்சியது பெற்ற மனம்.

சொல்லாமலும் முடியாது. காமு நின்ற இடத்தில் நிற்கவே அருவருப் படைகிறாள் ராஜம். அவள் தொட்ட எதையும் பிறர் தொடக்கூடா தென்பது டாக்டர் உத்தரவு. ஆனால் காமுவிடம் தெரிவிக்க, நேருக்கு நேர் சொல்ல மட்டும் மனம் துணியாமல் சற்றுத் தயங்கினாள். தனி இடத்தில் ஒதுக்கி வைத்து அவள் மனதை நோகச் செய்வதை விட கண் காணாமல் அவள் ஊரைப் பார்த்து அனுப்பி விடலாம். பிறகு அவள் பாடு அவள் கணவன் பாடு என்கிற தீர்மானத்தோடுதான் அம்மாவிடம் மட்டும் சொல்லியிருந்தாள்.

ஆனால் அம்மாவோ அதற்கான ஏற்பாடு ஒன்றுமே செய்யாமல் நாட்களை ஓடவிட்டுக் கொண்டிருந்தாள். இது பொறுக்கவில்லை. அம்மாவின் மனசில் அலைமோதும் போராட்டத்தை ராஜம் எங்கே கண்டாள்?

"அம்மா இன்றிரவு காமுவை ரயிலேற்றி அனுப்ப ஏற்பாடு செய்யட்டுமா?" என்று ராஜம் கேட்டபோது திடுக்கிட்டாள் தாயார்.

காமு போக வேண்டுமா? ஆமாம் போகத்தான் வேண்டும். ஆனால் எங்கே போவாள்? எங்கே போய் என்ன செய்வாள்? செலவழிக்கப் பணமும் பாடுபட மனிதர்களும் யார் இருக்கிறார்கள்? அப்படியானால் நானும் அவளோடு போக வேண்டியதுதான்.

இதை எதிர்பார்க்கவில்லை ராஜம். அம்மாவின் பேச்சினால் ஆத்திரப்பட்டாள்.

"என்ன நீயும் போக வேண்டுமா?"

"ஏன் நானும்தான் போக வேண்டும்" என்று புறப்படத் தயாராய் நின்ற தன் தாயாரைக் கண்டு சீற்றம் கொண்டாள்.

"அப்படியானால் என் நிலை என்னவென்பதை நினைத்துப் பார்த்தாயா, அம்மா?"

"உனக்கென்ன உன் உடம்பு முன்னைக் காட்டிலும் தேறி விட்டது. மேலும் உன் கணவர் உன்னைக் கைவிட மாட்டார். நானைக்கே தகுந்த ஏற்பாடு செய்து உன்னைக் கவனித்துக் கொள்ள வென்று பிரத்தியேக டாக்டரை வரவழைத்து விடுவார். ஆனால் காமுவின் நிலை அப்படியல்லவே?" என்றாள்.

"அம்மா உன்னுடைய சமாதானம் எனக்குத் தேவையில்லை. நீ போகக் கூடாது. நீ இருந்துதான் ஆக வேண்டும்."

இந்தச் சம்பாஷணையைக் கேட்டுக் கொண்டு வந்த காமு தன் நிலையைப் புரிந்து கொண்டாள். ராஜத்தின் மனம் அவளுக்குத் தெரிந்து விட்டது. இனிமேல் நடக்க வேண்டியதென்ன என்பதையும் ஒரு கணத்தில் நிர்மானித்துக் கொண்டாள்.

"இன்றிரவு மெயிலுக்குப் போக ஏற்பாடு செய்து விடு, அக்கா! நான் என் ஊருக்குப் போக வேண்டும்" என்று கூறிய காமுவின் விழிகளில் நீர் தேங்கி நின்றது.

காமுவுடன் கூடவே பிடிவாதமாய்த் தாயாரும் புறப்பட்டதைக் கண்ட போது எல்லையில்லாத சினம் மூண்டெழுந்தது ராஜத்தின் நெஞ்சத்திலே. "உன் மூத்த மகள் இறந்து விட்டாள் என்று நினைத்து வண்டியேறி விடு" என்று கூறி வழியனுப்பினாள் தாயாரை. அதில் இனி பணத்துக்கு என்றுமே என் உதவியை எதிர்பார்க்காதே என்பதின் அர்த்தம் தொனிப்பதைக் காமுவோ அவள் தாயாரோ அறியாமல் இல்லை.

தன் பொருட்டுத் தாயார் படும் அவதியைக் காமு அறியாமல் இல்லை. அக்காள் ராஜத்தின் சொல்லைக் கேட்டிருந்தால் அம்மா எத்தனையோ சுக சௌக்கியத்துடன் இருக்கலாம். அதை விட்டுப் பெற்ற பாசத்துக்காக ஆஸ்பத்திரி வாசலில் காத்துக்கிடக்கும் தன் தாயாரை நினைத்து மனம் நைந்து போவாள்.

இதற்காக வெல்லாம் மனத்தை வருத்திக்கொள்ளும் வழக்கம் தாயாருக்கு இடையாது. அவள் எதற்கும் துணிந்த கட்டை. தன் மனதில் நியாயம் எதுவென்று படுகிறதோ அதைத்தான் செயலில் காட்டுவாள். அந்தக் குணம் மட்டும் இல்லையானால் ராஜத்தை எதிர்த்து வந்திருக்க முடியுமா? ஆனால் அப்படி வந்தது தவறு என்பதைப் பணம் இல்லை என்பதற்காகப் பாதி வைத்தியத்தில் டாக்டர் வீட்டுக்குப் போகச் சொன்னபோது தான் நினைக்கத் தோன்றியது.

ராஜத்தையும் பகைத்துக் கொண்டு விட்டோமே, இனி பணத்துக்கு என்ன செய்வது என்று தவித்த நிலையில்தான் காமுவின் கணவர் எங்கேயோ போனார். எப்படியோ பணத்தைச் சேகரித்துக்கொண்டு வந்தார்.

இதெல்லாம் பழைய கதை. யார் செய்த புண்ணியத்திலோ காமு பிழைத்து மனிதர்களோடு சேர்ந்து விட்டாள். முகத்திலேயே விழிக்க மாட்டேன் என்று வர்மம் கூறிய ராஜம் தங்கையைப் பார்க்க வந்திருந்ததோடு அவள் நிலைக்காகக் கண்ணீர் வடிக்கும் அளவுக்கு மனம் மாறியுமிருந்தது. இம் மனமாற்றத்துக்குக் காரணம் அவள் கணவர் கிருஷ்ணன்தான் என்பது அப்பாவி காமுவுக்கு எப்படித் தெரிந்திருக்க முடியும்?

* * *

தாயாரையும் தங்கையையும் வழியனுப்பி விட்டு ஆத்திரத்தோடு கதவைப் படீரென்று சாத்திக்கொண்டு படுத்தவள்தான் ராஜம். அழுதழுது கண்ணீரை வடியவிட்டுக்கொண்டு தூங்கிப் போய்விட்டாள். வெகு நேரத்துக்கு அப்பால் கணவர் வந்து தட்டவே கதவைத் திறந்தாள். அழுது முகம் வீங்கிப் போயிருந்த ராஜத்தின் முகத்தைப் பார்த்துத் திடுக்கிட்டு விட்டான் கிருஷ்ணன்.

"ஏன் ராஜம் முகமெல்லாம் வீங்கிப் போய் இருக்கிறதே, உடல் நலமில்லையா என்ன?" என்று பதறிப்போய்க் கேட்டான். ஒருவாரமாக வேலையின் நிமித்தம் வெளியூர் போயிருந்ததால் நடந்த தொன்றும் அவனுக்குத் தெரியாது. பழையபடி வியாதிதான் வந்துவிட்டதோ வென்று பதற்றத்தோடு கேட்டதற்குப் பதில் ஒன்றும் சொல்லாமல் ராஜம் விக்கி விக்கி அழுத போது கலங்கி விட்டான் கிருஷ்ணன். "ஏன் என்ன நடந்தது? அம்மா காமு வெல்லாம் எங்கே?" என்று கேள்விமேல்



கேள்வியாகக் கேட்கவே ஒரு வகையாகத் தன்னைத் தேற்றிக் கொண்டு நடந்ததைக் கூறி முடித்தான் ராஜம்.

“நீ நினைப்பது தவறு. தாய்க்கு இரண்டு பெண்ணும் சமம்தான். உன் தாயார் நீர யோசித்துத்தான் இந்த முடிவுக்கு வந்திருக்கிறாள். நீதான் சுயநலமே பெரிதாகக் கருதி நியாயத்தைச் சிந்திக்காமல் படபடவென்று நடந்து கொண்டிருக்கிறாய். காமுவின் வியாதி எத்தகைய கொடுமையானது என்பதை நீ உணராதது வருந்தத் தக்கது. வைத்தியம் இல்லாமல் கழியும் ஒவ்வொரு நிமிஷமும் அவளை விரைவில் எமனிடம் அழைத்துச் செல்லும் என்பது வியாதியின் கொடுமையை அனுபவிப்பவர்களே உணர முடியும். உன் போன்ற சுகவாசிகள் அதை உணர நியாயமில்லை. உன் பணத்தினால் உனக்கு லேசாகத் தலையை வலிக்குமுன் உன்னைக் கவனிக்க உன் பணம் உதவுகிறது. உன் பணத்தைக் கொண்டு அவள் வியாதியைத் தீர்த்துவிடாததோடு உதவிக்குச் செல்லும் உன் தாயாரையும் உன் பண பலத்தினால் தடுத்து நிறுத்தத் துணிந்தாயே இது நியாயமா?” என்று வெறுப்போடு கூறி முடித்தான் கிருஷ்ணன்.

கணவன் கூறிய ஒவ்வொரு வார்த்தையும் கூரிய அம்பெனப் பாய்ந்தது நெஞ்சிலே. அவன் விவரமாக எடுத்துச் சொன்ன பிறகே தங்கைக்கு வந்திருக்கும் வியாதி எத்தகைய கொடூரமானது என்பதை உணர முடிந்தது. அதைவிடக் கொடூரமாக நடந்து கொண்ட அவள் செய்கை அவளை வாட்டி வதைத்தது.

வியாதியோடு வந்த தங்கைக்குக் கொடுமை செய்து விட்டோம். வியாதியால் குன்றிப் போய் இருந்த தங்கை காமுவை மேலும் புண்படப் பேசிவிட்டோமே என்ற எண்ணம் அவள் நெஞ்சை வருத்திற்று. இந்த எண்ணம் மண்டையினுள்ளே புகுந்து ஏற்கனவே பலவீனமாய் இருந்த அவளைப் படுக்கையில் தள்ளிவிட்டது. உடனே காமுவைப் பார்க்கத் துடித்தாள். ஆனால் அவள் உடல் நிலை அதற்கு இடங் கொடுக்கவில்லை. கணவனைப் போகச் சொன்னாள். கம்பெனியில் வேலை அதிகமாயிருந்ததால் அவனும் போக முடியவில்லை. பணத்தை மட்டும் அனுப்பத் தீர்மானித்தான். ஏற்றுக் கொள்வாளோ மாட்டாளோ என்ற நிலையில்தான் காமுவின் கணவனை அவன் சந்திக்க நேர்ந்தது.

பண வசதி இல்லாமல் அரைகுறையான வைத்திய வசதியோடு மனைவியை அழைத்து வந்துவிட்டதாக அவன் கூறக் கேட்டபோது துடித்துப்போனான் ராஜம். ஒன்றுக்குப் பத்தாகப் பணத்தைக் கொடுத்து அனுப்பி அந்தக் கணமே தொடர்ந்து வைத்தியம் செய்யச் சொல்லித் தங்கையின் கணவனை ஊருக்கு அனுப்பி வைத்தாள். பணம் தான் கொடுத்ததாக காமுவுக்குத் தெரிய வேண்டாமென்றும் சொல்லியனுப்பியிருந்தாள்.



“என்ன ஸார், நீங்கள் இந்த மோட்டார் டயர் செருப்பைப் போய் வாங்கி இருக்கிறீர்களே?”

“காரில்தான் போகக் கொடுத்து வைக்கவில்லை யென்றாலும் டயரிலேயாவது போகலாமே என்றுதான் வாங்கினேன்!”

* * *

ராஜம் இருந்த நிலையில்தான் காமுவின் உள்ளமும் போராடிக் கொண்டிருந்தது.

வியாதியின் தன்மையால் ராஜம் எத்தனை தாம் மன்றாடியும் தாயாரைத் தன்னுடன் அழைத்து வந்துவிட்டாள் காமு. ஆனால் ஊருக்கு வந்த சில நாளைக்கெல்லாம் என்னதான் பணமிருந்தாலும் உதவிக்கு ஆளில்லாமல் அக்காள் எப்படியெல்லாம் திண்டாடுவாள். குழந்தை குட்டிகளின் தொல்லைகளைக் கவனிக்க ஆள் இல்லாமல் எத்தனை கஷ்டப்படுகிறாளோ என்று நினைத்துக் கொள்ளுவாள். ஒரோரு சமயம் தாயாரைத் தன்னுடன் அழைத்து வந்ததே தவறு என்று வருத்தப்படுவாள். சுயநலம் காரணமாக அழைத்து வந்துவிட்ட தன்னை அக்காள் மன்னிப்பாளா என்ற எண்ணம் அவள் இதயத்தில் வேரூன்றிப் போயிருந்தது. அன்று ராஜத்தைக் காணவும் எதுவும் பேச முடியாமல் திணறினாள் காமு. அக்காவும் தங்கையும் ஒருவரோடு ஒருவர் பேச முடியாமல் திகைத்த சமயம் வெளியே போயிருந்த காமுவின் கணவன் வந்து சேர்ந்தான்.

“அக்கா வந்திருக்கிறாள். சுயநலமாக அம்மாவை நான் அழைத்து வந்ததைக் கூடப் பொருட்படுத்தாமல் என்னை மன்னித்து விட்டாள்” என்று பெருமிதத்தோடு கூறிக் கொண்டாள் கணவனிடம்.

“மன்னித்தது மட்டுமா? உனக்கு உயிர் கொடுத்ததே அவளுடைய பணந்தானே” என்று கணவன் கூறியதைக் கேட்ட போது ராஜத்தைத் தெய்வமாக எண்ணினாள் காமு.

வியாதியோடு போராடி வந்த தங்கையிடம் சுயநலத்தின் காரணமாய்க் கொடூரமாய் நடந்து கொண்டு விட்டோமே என்று உருகிக் கொண்டிருந்த ராஜத்துக்கு, தன் பணம் சமயத்தில் உதவிக் காமுவின் உயிரைக் காப்பாற்றி விட்டது என்பதைக் கேட்கத் திருப்தியாக இருந்தது. தன் தவறுக்குப் பிராயச் சித்தம் கிடைத்து விட்டது என்ற எண்ணம் அவள் உள்ளத்தில் இன்பத்தையும் அமைதியையும் கொடுத்தது.

# “மைலோ” கலந்து சாப்பிடுங்கள்




அருந்துவதற்கு உண்மையாகவே ஓர் சிறந்த பானம்

---

## இருமல், உபாதையளிக்கும் ஆஸ்துமா, மார்ச்சளி இவை மூன்றே நிமிஷங்களில் அகற்றப் படுகின்றன.

ஆஸ்துமா, மார்ச்சளி தாக்குதலால் மூச்சுத் திணறி தூக்கமின்றி அவதியுறுகிறீர்களா! அதிகமாக இருமுவதால் பிராணவஸ்தையாக இருக்கிறதா! பலஹீன உணர்ச்சியினால் வேலை செய்ய அசக்தராகவும், குளுமையான வஸ்துக்களையும் சிற்சில உணவுகளையும் உட்கொள்ள முடியவில்லையா!

எவ்வளவு நாட்களாக உபாதையுற்று எதை உபயோகித்திருப்பினும் சரி, மெண்டாகோ ஓர் புதிய நம்பிக்கையை அளிக்கும். மயக்க மருந்து, புகை பிடித்தல், இஞ்சக்ஷன், ஆட்டோமைஸர் இவை தேவையில்லை. செய்ய வேண்டியதெல்லாம் ருசியற்ற இரண்டு பில்லைகளை சாப்பாட்டின்போது உட்கொள்ள வேண்டியதே. உபத்திரவங்கள் மாயமாக அகன்றுவிடும். மூன்றே நிமிஷங்களில் மெண்டாகோ இரத்தத்துடன் கலந்து வேலை செய்யத் தொடங்கி கபத்தைக் கரைத்து சிரமம் இன்றி ஸ்வாஸத்தை அபிவிருத்தி செய்து முதல் நாள் இரவிலேயே நல்ல நித்திரையை அளித்து விரைவில் பல வருஷங்கள் யௌவன உணர்ச்சியையும் பலத்தையும் பெறுவீர்கள்.

### 2 ஆண்டுகளாக ஆஸ்துமா இல்லை

மெண்டாகோ அநேகமாக உடனே குணமளித்து ஸ்வாசத்தை இலகுவாக்குவது மட்டுமின்றி எதிர்கால தாக்குதல் ஏற்படாது செய்கிறது. உதாரணமாக மிஸ்டர் ஜே.ஆர். இருமல் மூச்சுத் திணறலால் இரவு தூக்கமின்றி 40 பவுண்டு எடை குறைந்து இறந்துவிடுவார் என எதிர்பார்க்கப்பட்டது. மெண்டாகோ ஆஸ்துமாவை முதல் நாளே நிறுத்தி விட்டது. இரண்டு வருஷங்களில் அத்தொந்தரவே அவருக்கு மீண்டும் ஏற்படவில்லை.

### பணம் வாபஸ் உத்தரவாதம்

மெண்டாகோ முதல் வேளை சாப்பிட்டதும் நேரடியாக இரத்தத்துடன் கலந்து ஆஸ்துமாவை ஒழிக்கிறது. மெண்டாகோ அதிவிரைவில் வயதில் பல வருஷம் யௌவன உணர்ச்சி, பலம் இவற்றை அளிக்கிறது. வாபஸ் உத்தரவாதத்தின் கீழ் மெண்டாகோ உபயோகித்துப் பார்த்து தீர்ப்பளியுங்கள். மெண்டாகோ சாப்பிட்ட பின் பூரண குணம் பெற்று, திருப்தி யளிக்காவிடில் காலிப் பெட்டியை அனுப்பினால் முழுத் தொகையும் வாபஸ் செய்யப்படும். இன்றே மருந்து வியாபாரியிடமிருந்து மெண்டாகோ வாங்குங்கள். இன்றிரவு எப்படித் தூங்குகிறீர்கள், மறு நாள் காலை எவ்விதமான தெம்புணர்ச்சி ஏற்படுகிறதென்பதையும் பாருங்கள். உத்தரவாதம் உங்களுக்கு நல்ல பாதுகாப்பை அளிக்கிறது.

**Mendaco**

**மெண்டாகோ**

★ ஆஸ்துமா ★ மார்ச்சளி நோய் ★ ஹே ஜுரம் இவற்றை அறவே அகற்றுகின்றது

# ஆரோக்கிய ரகசியம்

வி. என். குமாரசாமி

## 14. கண் பயிற்சி

சிரசாசனத்தை நன்றாகச் செய்ய வந்த பின்தான், கண் பயிற்சி செய்ய வேண்டும். ஆரம்பத்திலேயே செய்ய ஆரம்பிக்கக்கூடாது. குறைந்தது மூன்று அல்லது ஐந்து நிமிஷமாவது ஒரே தடவையில் சிரசாசனத்தில் நிற்க வரவேண்டும். அப்பொழுது செய்தால் தான் கண் பயிற்சி செய்ய நேரம் கிடைக்கும். நிம்மதியாகவும் செய்ய முடியும். அதற்கும் குறைந்த நேரம் அதாவது ஒரு நிமிஷம் செய்பவர்கள் மூன்று அல்லது ஐந்து நிமிஷ நேரம் வரை சிரசாசனத்தைச் செய்யப் பழகிய பின்பு ஆரம்பிக்கலாம். தவிர ஆரம்ப சாதகர்கள் சிரசாசனத்தில் சரியாய் நிற்க மாட்டார்கள். விழுந்து விடுவோமோ என்ற பயம் வேறு மனதில் இருக்கும். அம்மாதிரி பதட்டமெல்லாம் இல்லாமல் சகஜமாய்ச் சிரசாசனத்தில் நிற்க வந்தபின் கண் பயிற்சி ஆரம்பிப்பது உத்தமம். சுவரின் உதவியோடு சிரசாசனம் செய்பவர்களும் கண் பயிற்சி செய்யலாம். குதிகால்கள் மட்டும் லேசாக சுவரில் பட வைத்துக் கொண்டு கண் பயிற்சியைச் செய்ய வேண்டும்.

1. கண்களை ஜோடியாகப் பக்கங்களில் வலது மூலைக்கும், இடது மூலைக்குமாக பின் பக்கத்திலிருக்கும் படத்தில் முதல் நம்பரில் இருப்பதுபோலக் கொண்டு செல்லவும்.

2. கண்களை மேலுக்கும் கீழுக்குமாக இரண்டாவது படத்தில் இருப்பதைப் போல் முடிந்தவரை இம்மாதிரி விழிகளைக் கொண்டு போய்ப் பார்க்க வேண்டும்.

3. இடது குறுக்காக மூன்றாவது படத்தைப்போல் கண்களைக் கொண்டு செல்லவும். அதாவது இடது பக்கம் மேல் மூலையைக் கண்களால் பார்ப்பது. மறுபடியும் அங்கிருந்து வலது பக்கத்துக் கீழ் மூலைக்குத் திருஷ்டியைச் செலுத்துவது.

4. வலது குறுக்காக நாலாவது படத்தில் இருப்பதுபோல் இம்மாதிரி கண்களைக் கொண்டு செல்லவும். அதாவது வலது பக்க மேல் மூலையைக் கண்களால் பார்ப்பது. பிறகு இடது பக்கக் கீழ் மூலைக்குக் கண்ணின் பார்வையைக் கொண்டு செல்லுவது.

5. பிறைச் சந்திரனைப்போல அரை வட்டமாய் ஐந்தாவது படத்தைப்போல் கண்களைக் கொண்டு செல்வது. அதாவது இடது மூலையிலிருந்து ஆரம்பித்து கண்களைக் கீழ் நோக்கிக் கொண்டுவந்து பிறகு மேலே திருப்பி வலது மூலையில் முடிப்பது. மறுபடி வலது மூலையிலிருந்து கண்களைக் கீழ்நோக்கிக் கொண்டு வந்து இடது பக்க மூலையில் முடிப்பது. இதை நிதானமாகச் செய்யவும்.

6. பிறைச் சந்திரன் தலைகீழ் இருப்பதைப் போல ஆறாவது படத்தில் இருக்கும் மாதிரி கண்களைக் கொண்டு செல்ல வேண்டும். அதாவது இடது மூலையிலிருந்து கண்களை மேல் நோக்கிக் கொண்டு வந்து வலது மூலையில் முடிப்பது. மறுபடியும் வலது மூலையிலிருந்து கண்களை மேல் நோக்கிக் கொண்டு வந்து இடது மூலையில் முடிப்பது.

7. கண்களை இடமாக ஏழாவது சித்திரத்தில் உள்ளதைப் போல் சுழற்றவும். வலது மூலையிலிருந்து மேல் நோக்கிக் கண்களைச் சுழற்றிக் கொண்டு வந்து ஆரம்பித்த இடத்திலேயே முடிக்க வேண்டும்.

8. கண்களை வலமாக சித்திரம் எட்டில் உள்ளது போல் சுழற்ற வேண்டும். இடது மூலையில் ஆரம்பித்துக் கீழ் நோக்கிக் கண்களைச் சுழற்றிக் கொண்டு வந்து ஆரம்பித்த இடத்திலேயே முடிக்க வேண்டும்.

மேற்சொன்ன ஒவ்வொரு முறையையும் ஆரம்பத்தில் மும்மூன்று முறைகள் செய்யலாம். பின் வாரத்துக்கு ஒரு தடவை அதிகமாக்கிக் கொண்டு வந்து ஒன்பது தடவை வரைக்கும் செய்யலாம். இப் பயிற்சி செய்யும் போது கண்களைக் கூடுமானவரை ஒரு மூலைக்கும் மறு மூலைக்கும் நன்றாய்க் கடைசி வரை கொண்டு செல்ல வேண்டும். அப்படி விழிகளைத் திருப்ப முயற்சி செய்யும் போது சிலருக்குக் கழுத்தும் தலையும் திரும்பும். அவர்கள் அப்படித் திரும்பாமல் கவனம் வைத்துப் பழக வேண்டும். ஆரம்பத்தில் கண் விழிகள் நமது இஷ்டப்படி சரியாய்த் திருப்ப வராது. மனதைக் கண் விழிகளைத் திருப்புவதில் செலுத்திச் சிரத்தையுடன் பழகி வந்தால் சில நாட்களில் நன்றாய்த் திருப்ப வரும்.

இந்தக் கண் பயிற்சியைச் சிரசாசனத்தில் செய்தால் மிகவும் நன்மையுண்டு. தவிர சிரசாசனம் செய்பவர்கள்தான் இந்தக் கண் பயிற்சியைச் செய்யவேண்டுமென்பதில்லை. சிரசாசனத்தைச் செய்ய முடியாதவர்கள், வயதின் காரணமாகவோ, சரீர வளர்ச்சியின் காரணமாகவோ, வியாதியின் காரணமாகவோ எத்தனையோ பேர் இருப்பார்கள். அவர்களெல்லாரும் வெறுமனே சாதாரணமாய் நிமிர்ந்து உட்கார்ந்து இந்தப் பயிற்சிகளைச் செய்யலாம்; பத்மாசனத்தில் உட்கார்ந்தும் செய்யலாம். நாற்காலி, சோபாவில் உட்கார்ந்துகூடச் செய்யலாம். படுக்கையில் கிடக்கும் நோயாளிகளும் படுத்தவாறே செய்யலாம். இளஞ் சூரியன் முன் செய்வது இன்னும் கொஞ்சம் அதிக பலன் தரும்.

சாதாரணமாய்ச் சிரசாசனம் செய்தாலே பூமியின் ஆகர்ஷண சக்தியினால் சிரசிலுள்ள அவயவங்களுக் கெல்லாம் ரத்த போஷணை

நிறைய கிடைக்கும். கண்களுக்கும் அவ்வாறே. ஆனால் இந்தக் கண் பயிற்சியையும் எப்பொழுதும் செய்தால் நரம்புகள் தசைகள் நன்கு இழுக்கப் பட்டு இன்னமும் கண்ணாடியைத் துடைத்துவிட்டாற் போலக் கண்களுக்குத் தெளிவு ஏற்படும்.

வெள்ளெழுத்து நமக்கு எப்படி உண்டாகிறது?

கண் திரைகளுக்கும் கண்ணாடிக்கும் அணுக்களுக்கும் ரத்த போஷணை நரம்புகள் அளிக்காவிட்டாலோ அல்லது ரத்தத்தில் போதிய சத்துக்கள் இல்லா விட்டாலோ வெள்ளெழுத்து உண்டாகும். உருவம் தெரியாது. எல்லாம் சுத்தப் பிரம்மமாய் வெள்ளை வெளேரென்றிருக்கும். இவைகளுக்கெல்லாம் நேரடியாகச் சிகிச்சை ஒன்றும் டாக்டர்கள் கொடுப்பது இல்லை. ரத்த போஷணை உண்டாக்க கால்ஷியம், விடமின் பி. போன்ற ஊசிகளை ஏற்றுவார்கள். இதனால் ஒருக்கால் ரத்த போஷணைக் குறைவினால் ஏற்பட்ட வெள்ளெழுத்து மறையலாம். வர்ணத்தைப் பிரித்துணரும் அணுக்களுக்கும் வெளிச்சம் ஊடுருவிச் செல்லும் கண்ணாடிக்கும், கண் திரைகளுக்கும் சம்பந்தப்பட்ட ரத்த நாளங்கள் சூம்பி இருப்பதை எந்த மருந்தினாலும் ஊசியினாலும் ஒன்றும் செய்துவிடமுடியாது. ஆனால் சிரசாசனத்தினாலும், மேற் சொன்ன கண் பயிற்சியினாலும், சூரியனை உற்றுப் பார்ப்பதினாலும் பார்வையை அடைய முடியும். இந்த வெள்ளெழுத்து சாதாரணமாய் வயதானவர்களுக்குத்தான் வருகிறதென்பதில்லை; எல்லா வயதினருக்கும் உண்டாகிறது. ஆனால் அப்படி ஏற்பட்டவர்களைப் பார்த்தால் அம்மாதிரி இருப்பதாகத் தென்படாது. பார்ப்பதற்குச் சாதாரணமாய் நம்மைப் போலத்தான் இருப்பார்கள். கண்களும் பார்க்க நன்றாய் இருக்கும். ஆனால் அவர்களுக்குக் கண்களால் பார்க்க முடியாது; படிக்க முடியாது; எழுத முடியாது.

ஒரு வாலிபன் இருபது வயதிருக்கும். பி. ஏ. வகுப்பில் படித்துக் கொண்டிருந்தான். இருந்தாற் போலிருந்து கண் பார்வை தெரியாமல் போய் விட்டது. பிறர் உதவி யில்லாமல் எங்கும் போவதற்கும் படிப்பதற்கும் முடியவில்லை. தான் படித்து முன்னுக்கு வந்து சம்பாதித்தால்தான் தன் எதிர்காலத்து வாழ்க்கையை நடத்த முடியும். இந்நிலைமையில் தீவிரமாய்ப் பல வைத்தியங்கள் செய்யப் பட்டன. தைலங்கள், ஸ்நானங்கள், உள்ளுக்கு மருந்துகள், ஊசிகள், எக்ஸ்ரே சிகிச்சைகள் பல நடந்தன. எதற்கும் இந்தக் கண் பார்வை கிடைக்கவில்லை. அழகான வாலிபன். பார்க்கக் கண்களும் மிக அழகாகத்தான் இருந்தன. ஆனால்......




எப்படியோ ஆசன மகிமையைக் கேள்விப் பட்டு என்னிடம் அழைத்து வந்தார்கள். விவரங்கள் அறிந்தேன். இது எனக்குப் புதிய கேஸ். புதிய அனுபவம். ஆனால் யோக சாஸ்திரத்தில் இம்மாதிரியான கண்களுக்குச் சிரசாசனத்தில் பார்வை கிடைக்குமென்று இருப்பதைவைத்துக்கொண்டு முதலில் சிகிச்சை ஆரம்பித்தேன். புஜங்காசனம், பஸ்சிமோத்தானாசனம், சர்வாங்காசனம், மத்ஸ்யாசனம் முதலியவை முதல் இரண்டு வாரங்களுக்குச் செய்வித்துப் பிறகு சிரசாசனம் செய்து வரும்படி சொன்னேன். இதை வாரத்துக்கு ஒரு நிமிஷமாக அதிகமாக்கி வந்து அரை மணி நேரம் செய்யச் சொன்னேன். கண் பயிற்சியும் சொல்லித் தந்தேன். காலை மாலை சூரியன் முன்னும் கண் பயிற்சி செய்யச் சொன்னேன். தினம் சூரியனை இரண்டு நிமிஷம் அதிகாலையில் உற்றுப் பார்க்கச் செய்தேன். அப்படிச் செய்வதாக சொல்லிப் போனான். இது நடந்தது சுமார் பத்து வருடங்களுக்கு முன்பு இருக்கும்.

சென்ற வருடம் அவ்வாலிபர் என்னைப் பார்க்க வந்தார். அவருடைய கண்கள் குணமாகிச் சௌகரியமாக இருந்தார். இரண்டு வருஷங்களிலேயே கண் பார்வை நன்கு தெரிந்ததாகக் கூறி எனக்கு நன்றி தெரிவித்தார். (தொடரும்)

Edited Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press
116-119, Sladens Garden, Poonamallee High Road, Kilpauk, Madras

எப்பொழுதும், எங்கும்



கைகளில் அழுக்கிலிருக்கும் கிருமிகள் பற்றிக்கொள்ளலாம்



அவைகளை உங்கள் உடலிலும் பரவச்செய்யலாம்

இந்த ஆபத்தை தவிர்க்க—

கைகளையும் உடலையும் தவறாமல்

# லைப்பாய் சோப்பினால்

கழுவுங்கள்.

அது அழுக்கிலிருக்கும் கிருமிகளிலிருந்து உங்களை காப்பாற்றுகிறது.




L. 219-50 TM

Regd. No. M 4392
*Registered as a newspaper in Ceylon*







